# தனிக்குறிப்பு

பேரா. அ.ச.ஞா.விடம் இலக்கியம் குறித்து வினாக்கள் எழுப்பி, அவர் தந்த விடைகளைப் பதிவு செய்தது இந்த நூல்.

முன்னரே இப்படிப்பட்ட அ.ச.ஞா.வின் விடைப் பதிவுகள் வெளியாகியுள்ளன. ‘இன்றும் இனியும்’ என்பது முதலில் வெளிவந்தது. அண்மையில் ‘தொட்டனைத்து ஊறும்...’ வெளிவந்தது. இப்போது மூன்றாவதாக இந்நூல் வெளிவருகிறது.

முதல் நூலிலே பேச்சு நடை இராது; எழுத்துரையாகவே அமைந்தது. ஆங்காங்கே மேடைப் பேச்சு நடையின் எதிரொலியை அடையாளம் காண முடியுமாயினும், முதல் நூல் எழுத்துரையாகவே அமைந்தது. ‘தொட்டனைத்து ஊறும்...’ எழுத்துரையாக இல்லாமல் பேச்சு நடையிலேயே அமைந்தது. ஆயினும் எழுத்துரையின் பாங்கு பெரிதும் இடம் பெற்றது.

இந்த நூல் எழுத்துரைப் பாங்குக்கு இடம் தரவில்லை; ஒலிநாடாவில் பதிவாகியதை ஏறத்தாழ நூற்றுக்கு நூறு அப்படியே எழுத்து வடிவில் தருகிறது. ஆங்கிலத் தொடர்களும் வாய்மொழி நடையும் கலந்து, அ.ச.ஞா.வின் சொற்பொழிவுகளைக் கேட்டவர்களுக்கு ஒரு புதுவகை விருந்தாக அமைகிறது இந்த நூல்.  பேசிய பேச்சை எடுத்து எழுதினால் எழுத்து நடை யாகவே அமைவது ஒரு வகை; பெரிதும் பேச்சு நடையாயினும் எழுத்து நடையை நினைவூட்டுவது இன்னொரு வகை. இந்த நூலில் மூன்றாவதாக வேறொரு வகை. பேச்சொலியை எழுத்தொலியாகப் பதிவு செய்வது இது.

பல இடங்களில்... இந்த மாதிரியான புள்ளிகள் இருக்கும். நேரில் கேட்கும்போது சொல்லப்படாத வார்த்தைகள் கேட்பவர்க்குப் புலப்பட்டுவிடும். எழுத்து வடிவில் கொடுக்கும்போது விடுபட்ட சொற்களைப் பெய்து எழுதினால் பேச்சு ஒலிக்கும் எழுத்து வடிவுக்கும் வேறுபாடு தெரியாது. அப்படிச் செய்வதற்கு ஆசிரியரின் ஒப்புதல்

வேண்டும். பேராசிரியர் அவர்களின் ஒப்புதலும் பார்வையும் பெறுவதற்கு இப்போது வழி இல்லை. ஆதலால் மூன்றாவது பகுதி தவிர, முதல் இரண்டு பகுதிகளும் ஒலிநாடாவையே நம்பி வெளியிடப் பட்டுள்ளன. அ.சஞா.வின் ஆளுமையின் ஒரு வகையைத் தெரிந்துகொள்வதற்கு உதவுமெனக் கருதி, அப்படியே வெளியிடுகிறோம்.

முதற் பகுதி வினா-விடையாக அமைகிறது. இரண்டாம் பகுதி விவாதமாக அமைகிறது. மூன்றாம் பகுதி பெரிய புராணம் பற்றி எழுப்பப்பட்ட கேள்விகளுக்குப் பேரா. அ.ச.ஞா. தந்த விடைகள்- இதழில் வெளி வந்தபடியே அச்சிடப்பட்டுள்ளன. (இந்த மூன்றாம் பகுதி மட்டும் அ.ச.ஞா. நம்மிடையே இருந்தபோது வெளி வந்தது)

சில இடங்கள் விளங்கவில்லை. அ.ச.ஞா.வின் விளக்கம் கேட்கவும் வழியில்லை. ‘இப்படித்தான் இருக்கும்’ என்று கருதி மிகச் சில இடங்களில் விளக்கங்கள் சேர்க்கப்பட்டுள்ளன. சில இடங்களில் விளங்காதவை நீக்கப்பட்டுள்ளன.

இந்நூலின் படி திருத்தம் செய்து, நூல் முழு வடிவம் பெற உதவி புரிந்த முனைவர் ம.ரா.போ. குருசாமி, முனைவர் தெ. ஞானசுந்தரம், முனைவர் அ.அ. மணவாளன், திரு. C.P. கௌரி சங்கர் ஆகியோருக்கு எங்கள் நன்றி உரித்தாகும்.

வழக்கம்போல் இதனை நன்முறையில் அச்சிட்டு வெளிக்கொணரும் கங்கை புத்தக நிலைய உரிமையாளர் திரு. இராமநாதன் அவர்களுக்கும், திரு. திருநாவுக்கரசு ஐயா அவர்களுக்கும் எங்கள் நன்றி உரித்தாகும்.

திறனாய்வுக் களத்தில் அ.ச.ஞா. பதித்து வைத்த முத்திரைகளைக் கண்டுணர முடியும் என்ற துணிவிலே, பயன்தரும் என்ற நம்பிக்கையோடு இந்த நூலை வெளியிடுகிறோம்.

அன்புடன்

**அ.ச.ஞா. குடும்பத்தினர்**

# 1. கம்பராமாயணம் - வினா விடை

**1. பெண்ணைப் போற்றிய இராமன், தன் அருமருந்தன்ன மனைவியைப் பார்த்து,**

**... ஒழுக்கம் பாழ்பட**
**மாண்டிலை முறை திறம்பு அரக்கன் மாநகர்**
**ஆண்டு உறைந்து அடங்கினை அச்சம் தீர்ந்து இவண்**
**மீண்டது என் நினைவு? எனை விரும்பும் என்பதோ?**

**என நாக் கூசாமல் கூறியது அவரது பண்புக்கு மாசு உண்டாக்கியது ஆகாதா?**

இந்த வினாவை எழுப்புவதற்கு முன்னர் இது தோன்றிய நிலைக்களத்தைச் சிந்திக்க வேண்டும். ஒரு மாபெரும் தவறு செய்துவிட்டாள் பிராட்டி. மானின் பின்னே இராகவன் சென்ற பிறகு லட்சுமணா என்ற குரல் கேட்டு, இராகவனுக்கு ஆபத்து வந்துவிட்டது என்று நினைக்கிறாள். இலக்குவனைப் போகுமாறு பணிக்கிறாள்.

கார் எனக் கரிய அக் கமலக் கண்ணனை
யார் எனக் கருதி இவ் இடரின் ஆழ்கின்றீர்?

என இளையபெருமாள் எடுத்துக்கூறியும்,

ஒரு பகல் பழகினார் உயிரை ஈவரால்
பெருமகன் உலைவுறு பெற்றி கேட்டும்
நீ வெருவலை நின்றனை

என்று கடுஞ்சொல் பேசிவிடுகிறாள். இந்த அவசர புத்தி பின்னர் அவளுக்குப் பெரும் இடைஞ்சலை உண்டாக்குகிறது. அசோக வனத்தில் சிறைப்பட்டிருக்கும்போது,

என்னை நாயகன் இளவலை எண்ணலா வினையேன்
சொன்ன வார்த்தைகேட்டு அறிவு இலள் எனத் துறந்தானோ

என அச்சப்படுகிறாள். ஆக, இளையபெருமாளுக்குத் தான் செய்த இந்த மாபெரும் தீங்கு இராகவன் தன்னை ஒதுக்குவதற்குக் காரணமாகிவிட்டதோ என்று அஞ்சுகிறாள். இந்த நிலையில் அவள் மனத்திலே ஒரு குற்ற

உணர்வு (guilt complex) ஏற்படுகிறது. இதை அறிந்துகொண்டான் இராகவன். இனி, பிராட்டியும், இலக்குவனும் அயோத்தியில் போய் நீண்ட காலம் ஒன்றாக இருக்க வேண்டியவர்கள். இந்தச் சூழ்நிலையில் இந்தக் குற்ற உணர்வோடு பிராட்டி இருப்பாளேயானால் இலக்குவனது முகத்தைப் பார்க்குந்தோறும், பார்க்குந் தோறும் மனத்தில் ஒரு நெருடல் உண்டாகும்.

இதைப் போக்க வேண்டுமென்று நினைக்கிறான் பெருமான். குற்ற உணர்வு உடையவர்கள் அதைப் போக்க வேண்டுமானால் ஒரே வழிதான் உண்டு. அதற்குரிய தண்டனையை அனுபவிக்க வேண்டுமென்பது மன இயலாருடைய கூற்று. அந்த நிலையிலே இலக்குவனுக்குத் தீங்கு செய்தவள் இலக்குவனிடம் மன்னிப்புக் கேட்க வேண்டும். அதற்கு என்ன வழி? இப்படிப் பேசினால் தான் அவள் தீப் புகுகின்றேன் என்று கிளம்புவாள். அதுவே அவன் நினைத்தபடி நடந்தது. தீப் புக வேண்டும் என்று இலங்கையிலே நினைக்கிற பிராட்டி இலங்கைக்குரியவனாகிய விபீஷணனைப் பார்த்து நீ தீ அமைத்துக் கொடு என்று சொல்லியிருந்தால், அது பொருத்தமாக இருக்கும். அதை விட்டுவிட்டு இலங்கைக்குப் புதிதாக வந்த இலக்குவனைப் பார்த்து, 'நீ தீ அமைத்துக் கொடு' என்று ஏன் கேட்கிறாள் என்றால், இலக்குவன் கையால் தீ அமைத்து அதில் தான்புகுவதுதான் அவனுக்குச் செய்த தீங்குக்கு உரிய தண்டனை என்று நினைக்கிறாள். இராகவனும் அதைக் கண்சாடை மூலம் ஒத்துக் கொள்கிறான். எனவே, இலக்குவன் தீ அமைத்துக் கொடுக்கிறான்.

இது ஒரு நாடகம். பிராட்டியினுடைய மனத்திலே ஒரு நெருடல் தோன்றி, அது வாழ்நாள் முழுவதும் அவளைத் துன்புறுத்தாமல் இருக்க இராகவன் செய்த மாபெரும் நாடகம். இதில் அதைப்பற்றித் தவறாக நினைப்பதற்கு ஒன்றும் இல்லை.

**2. கம்பர் மகாபாரத -கதை- கிளைக்கதை போன்று காப்பியம் இயற்றியிருந்தால் என்னவாயிருக்கும்?**

கம்பனுடைய எண்ணம் என்ன என்பதை முதல்

பாடலிலேயே நாம் தெரிந்துகொள்கிறோம். 9ஆம் நூற்றாண்டிலே பல்லவப் பேரரசு வீழ்ச்சி அடைந்த நிலையிலே இன்ப வேட்டையிலே மக்கள் புகுந்து விட்டார்கள். பூக்கொய் படலம், உண்டாட்டுப் படலம் என்ற இரண்டு படலங்களும் அன்றைக்குத் தமிழ்நாடு இருந்த நிலையைத் தெரிவிக்கின்றன. இப்படியே போனால் இந்த நாட்டுக்கு ஆபத்து உண்டாகிவிடும் என்று நினைத்து, புலன் அடக்கத்தை அறிவுறுத்த வேண்டுமென்று நினைத்து, அதற்காக இந்தக் கதையை ஏற்றுக்கொள்கிறான் கவிச்சக்கரவர்த்தி. பாரதத்தை எடுத்துக் கொண்டிருப் பானேயானால் இப்படிப்பட்டதொரு சூழ்நிலை உருவாகியிருக்காது. அவனுடைய கருத்து என்னவோ அதற்கு இடந்தந்தது இராம காதை. அந்த அடிப்படையில்தான் இதனை எடுத்துக்கொண்டான்.

**3. பரதனிடத்தில் பண்பு வளர்ச்சி உள்ளது.**

**'நின்னினும் நல்லன் ஆயிரம் இராமர்;**
**எண்ணில் கோடி இராமர்கள்'**

**என்றெல்லாம் கம்பர் பாடுகிறார். இப்படி மற்றவர்களுடைய பண்பு வளர்ச்சி குறிக்கப்படவில்லையே. காரணம் என்ன?**

இங்கே பண்பு வளர்ச்சி என்று சொல்ல நான் விரும்பவில்லை.

**4. 'தள்ளரிய பெருநீதித்தனிஆறு புக மண்டும்**
**பள்ளம் எனும் தகையான்'**

**- என்று விஸ்வாமித்திரர் குறிக்கின்றாரே?**

பரதனைப் பொறுத்தமட்டில் அவன் என்றுமே ஒரே நிலையில்தான் இருக்கின்றான். ஆனால், நீங்கள் காட்டிய மூன்று அடைகளும் இரண்டு பேரால் தரப்படுகின்றன. இதனை, பரதனுடைய வளர்ச்சி என்று சொல்வதை விட்டு, ஒவ்வொருவர் கணிப்பிலே அவன் எப்படி இருக்கிறான் என்பதுதான் அதனுடைய பொருள். ஒருவரைப் பொறுத்தமட்டில் ஆயிரம் இராமராகக் காட்சி அளிக்கிறான். ஒருத்தியைப் பொறுத்தமட்டில் எண்ணில் கோடி இராமராக இருக்கிறான். எனவே பரதனுடைய வளர்ச்சி என்றும் ஒரே

படியாகத்தான் இருக்கிறது. காண் பாருடைய காட்சிக்கேற்ப,

'ஆயிரம் இராமர் நின்கேழ் ஆவரோ?'

என்று குகனும்

'எண்ணில் கோடி இராமர்கள் என்னினும்
அண்ணல் நின் அருளுக்கு அருகு ஆவரோ'

என்று கோசலையும் அவரவர் கணிப்பிலே காண்கின்றனர்.

**5. வால்மீகி இராமாயணத்தைத் தழுவிக் கம்ப ராமாயணத்தை எழுதிய கம்பர், தமிழ்ப் பண்பாட்டு இயல்புக்கேற்ப மொழி பெயர்த்திருக்கிறார். அப்படி இருக்கும்பொழுது வாலியை இராமன் மறைந்து நின்று கொன்றது சரியா?**

இந்த வினா இன்று நேற்று அல்ல. கம்பன் என்று எழுதினானோ அன்றிலிருந்து இருந்துவருகிறது. இதற்கு அவரவர் விருப்பம்போல்தான் விடை கூற முடியும்.

இது ஏதோ திடீரென்று மறைந்து நின்று அம்பு எய்தான் இராமன் என்று கம்பன் ஏற்றுக்கொள்ள வில்லை. மிகத் தொடக்கத்திலே வாலி வதை பற்றிச் சுக்கிரீ வனிடம் கூறும்போது,

'**... வேறு நின்று**'

'**எவ்விடத் துணிந்து அமைந்தது**'

என்பதாக 'மறைந்து நின்று அம்பு எய்திடப் போகிறேன்' என்று இராமன் சொல்கிறான். அது சரியா, தவறா என்பது வேறு வாதம். ஆனால், அதை அப்படியே கம்பன் பாடுகிறான். இராமன் சொன்னான்; அது வாலியைப் பற்றி முழுவதும் அவன் ஏதும் அறியாத காலத்திலேயே எடுத்த முடிவு. பின்னர் வாலியை நன்கு அறிந்த பிற்பாடு, தான் எடுத்த முடிவு சரியோ என்கிற ஐயம் இராமனின் மனத்தில் எழுகிறது. அதற்காகத்தான்,

'**வில்லறம் துறந்தேன்**'

என்று சொல்கிறான். அதற்குத்தான் வாலியின் மகனை அழைத்து,

**'நீ இது பொறுத்தி'**

என்று உடைவாளைக் கொடுக்கிறான். வாள் என்பது அரசனுடைய அதிகாரத்தின் சின்னம். ஸிம்பல் ஆப் அதாரிட்டி (symbol of authority) அதிகாரத்தைச் சிறு பையனாகிய வாலியின் மகன் அங்கதனிடம் கொடுக்க வேண்டிய காரணம் என்ன? வாலிக்குத் தான் இழைத்த தவறைப் போக்கிக்கொள்ள வேண்டுமென்று நினைக்கிறான். அதற்கு வேறு வழியாகப் போக்கி யிருக்கலாம். வாலிக்கு மீட்டும் உயிரைக் கொடுத் திருக்கலாம். ஆனால், வாலி உயிரைப் பெரிதாகக் கருத வில்லை. 'என் உயிர்க்கு அஞ்சி வந்தேன்' என்று சொல்கிற சுக்கிரீ வனைப் போன்றவன் அல்லன் வாலி. உயிரை ஒரு பொருட்டாக நினைக்காததால் திருப்பி அவனுக்கு உயிரைக் கொடுப்பது அர்த்தமற்ற செயல். ஆகையினால், நீ இது பொறுத்தி என அவன் மகனிடம் வாளைக் கொடுக்கிறான். ஆக, இராமன்கூட மறைந்து நின்று அம்பு தொடுத்ததை ஒரு வருத்தத்தோடுதான் ஏற்றுக்கொள்கிறான் என்று நினைப்பது தவறு இல்லை.

**6. ஸ்ரீ இராமன் அவதாரமூர்த்தி என்பதைப் பல இடங்களில் கம்பன் சொல்லிச் செல்கிறான். கடவுளின் அம்சமாகிய ஸ்ரீ இராமன் பல கஷ்டங்களை அனுபவித்து இராவணனை வென்றான். இத்தகைய துயரங்களைக் கடக்க வேண்டிய கட்டாயம் என்ன? இது இராமனின் கடவுள் அம்சத்திற்குப் புறம்பானது அல்லவா?**

இராமன் கடவுள் அம்சம் என்று எல்லாரும் ஒத்துக் கொள்கிறார்கள், இராமனைத் தவிர.

இரண்டாவது, பரம்பொருளாக இருப்பினும் 'நிர்குண நிராமய' என்று தாயுமானவப் பெருந்தகை சொல்வதுபோல இருப்பது பரம்பொருள். அந்தப் பரம்பொருள்கூட உலகத்திலே வந்து மானுட வடிவம் தாங்கி விட்டால் அதற்குரிய சூழ்நிலையில்தான் அது இயங்க வேண்டுமென்பது இந்த நாட்டினுடைய கொள்கை. ப்ரபோத சந்திரோதயம் என்ற அற்புதமான நூலிலே நிர் குணப் பிரம்மத்தைப் பற்றிச் சொல்வார். நிர்க்குணப் பிரம்மம் கூடச் சகுணப் பிரம்மமாக வந்துவிட்டால் இந்த மனிதர்க்குரிய

எல்லாப் பண்புகளையும், நலம்-தீங்கு இரண்டையும் அனுபவித்துத்தான் தீரவேண்டும் என்பது இந்த நாட்டினுடைய வலுவான கொள்கை. அந்த முறை யிலே பரம்பொருள் இராகவனாக அவதரித்த பின்பு மனிதர்களுக்குரிய பல செயல்களை அவன் செய்து காட்டுகிறான். இனி மானின் பின்னே போனது கூட ஒரு வேடிக்கையான செயல்தான். இலக்குவன் மானைப் பிடித்துத் தருகிறேன் என்று சொல்லும்போது பிராட்டி இராமனிடம் சொல்கிறாள்...

'**நாயக! நீயே பற்றி நல்கலை போலும்**

என்று. அப்படியானால் நானே பற்றித் தருகிறேன் என்று போகிறானே, இது பரம்பொருளுக்குரிய இலக்கணமா? மனிதர்களுக்குரிய இலக்கணம். அப்படிப்பட்ட இலக் கணத்தோடு இராமனைப் படைத்ததனாலேதான் நாம் அவனோடு உறவு கொண்டாட முடிகிறது. இராகவனைப் பொறுத்தமட்டில் நம்மில் ஒருவனாக நினைக்க முடிகின்றது. அந்த முறையில் கம்பன் செய்தது சரிதான்.

7. **கம்பனின் கால கட்டம் எவ்வாறு நிர்ணயிக்கப்பெற்றது?**

பிரச்சினையான கேள்வி. ஒரு ஐம்பது ஆண்டுகளுக்கு முன்னர்ப் பல கருத்து வேறுபாடுகளுக்கு இடம் தந்த ஒன்று இது. இப்பொழுது ஒருவாறாக 9ஆம் நூற்றாண்டு என்பதாக அறிஞர்கள் முடிவுக்கு வந்திருக்கிறார்கள். அதற்குரிய காரணம்- இலக்கியத் திறனாய்வு வளர்ந்திருக்கிற முறையிலே இதை முடிவு செய்ய முடிகின்றது.

ஒரு மாபெரும் வல்லரசு தோன்றுவதற்கு முன்னேயும், அந்த வல்லரசு வீழ்ச்சி அடையும் நிலையிலும்தான் காப்பியம் தோன்றுமென்று உலகத் திறனாய்வாளர்கள் - எந்த மொழியாக இருப்பினும்- சொல்கிறார்கள். அந்த முறையிலே பல்லவ சாம்ராஜ்யம் வீழ்ச்சி அடைந்து விடுகிறது. பிறகு, சோழப் பேரரசு இன்னும் தோன்ற வில்லை. தோன்றவேண்டிய சூழ்நிலை உருவாகிக் கொண்டிருக்கிறது. அந்த நிலையிலே கவிச் சக்கரவர்த்தி தோன்றித் தன்னுடைய ராமகாதையைப் பாடுகிறான். அதேபோல் மிகப் பிரசித்தமாக வளர்ந்த சோழ சாம்ராஜ்யம்

300 ஆண்டுகள் கழித்துக் கீழே விழப் போகிறது. மூன்றாம் குலோத்துங்கன் காலத்திலே சேக்கிழார் தோன்றிப் பெரிய புராணத்தைப் பாடுகிறார். ஆகவே, பல்லவ சாம்ராஜ்யத்தின் வீழ்ச்சி, சோழ சாம்ராஜ்யத்தின் தொடக்கம்- அதிலே கம்பன் தோன்றுகிறான். ஆகவே 9ஆம் நூற்றாண்டு என்பது பொருத்தமாகப் படுகிறது.

8. **பரதனுக்கு இளவரசுப் பட்டம் சூட்டிய செய்தியைச் சொல்ல வருகின்ற கம்பர்- இராமனைப் பற்றிக் குறிப்பிடுகிறபொழுது,**

**'பரதனைத் தனது செங்கோல் நடாவுறப் பணித்து நாளும்**
**கரை தெரிவுஇலாத போகக் களிப்பினுள் இருந்தான் மன்னோ'**

**என்று சொல்வது- நாம் அடைந்து வருகிற இன்பத்தைவிட, எப்பொழுதுமே பேரின்பம் (Eternal bliss) தருகின்ற ஒரு முறையிலே அவன் யோக நிலையிலே இருந்துவிட்டானா என்பது எண்ணிப் பார்க்க வேண்டிய ஒன்றாக இருக்கிறது. ஐயாவின் கருத்து என்னவோ?**

இராமனைப் பொறுத்தமட்டில் பரதனைத் துல்லியமாக எடை போட்டிருந்தான் என்பது முற்றிலும் உண்மை என்றாலும், இராமன் மனத்திலே ஒரு சிறு நெருடல் இருந்துகொண்டுதான் இருக்கிறது. மரவுரி தரித்து வந்த பரதன் எவ்வளவு சொல்லியும், அந்த அரசை ஏற்றுக் கொள்ள மாட்டேன். அப்படிச் சபதம் செய்துவிட்டேன் எனச் சொல்லிவிடுவானோ என அஞ்சிக் கொண்டிருந்தான். அப்படி ஒருவேளை சொல்லியிருந்தால் இராமன் பாடு மிகமிகச் சிக்கலாக முடிந்திருக்கும். தேவர்களும் சொன்னார்கள். இது என் ஆணையாம் என்று இராமனும் கட்டளையிட்டான். அந்த ஆணைக்குக் கீழ்ப்படிந்து 14 ஆண்டுகள் ஆளுகிறேன் என ஒத்துக்கொண்டான். ஆகையினாலே, இராமன் மனத்தில் இருந்த மாபெரும் சங்கடம் அகன்றது. அது நடைபெற்றதனாலே இராமன் எல்லையில்லாத களிப்பில் மூழ்கினான். ஏனென்றால் பரதன் ஒத்துக்கொள்ளவில்லையானால் இராமாவதாரமே அர்த்த மற்றதாகிவிடும். இராவண சம்ஹாரம்

நடைபெற்றிருக்க முடியாது. இந்த உலகத்திற்கு அவன் எதற்காக வந்தானோ அதை நிறைவேற்றுதற்குரிய சூழ்நிலை, பரதன் ஆட்சியை ஏற்றுக்கொண்டால்தான் நடைபெறும். ஏற்றுக்கொள்ளமாட்டான் எனப் பயந்து கொண்டிருந்தான் இராகவன். அவன் ஏற்றுக்கொண்டான் என்றவுடனே எல்லையில்லாத களிப்பில் மூழ்கினான். அங்கே களிப்பு என்பது எப்படிப்பட்ட களிப்பு? தன்னலத்தினாலே ஏற்பட்ட களிப்பு அன்று. தான் எதற்காக இந்த உலகத்திடை வந்தானோ அது நிறைவேறுதற்குரிய சூழ்நிலை உருவானதால் களிப்பில் மூழ்கினான் என்று சொல்வது பொருத்தமாக இருக்கும் என் நினைக்கிறேன். (குறிப்பு: எழுப்பப்பட்ட கேள்வி இராமாயண இறுதியை மனங் கொண்டு எழுத்தது. பாடல் எழுந்த இடத்தைக் கானகம் செல்லுதற்கு முந்தியதாகக் கருதி அ.ச.ஞா. விடை அளித்துள்ளார். ஆனைக்கும் அடி சறுக்கும் தானே!)

**9. நாட்டுப் படலத்திலேயே,**

**பொற்பில் நின்றன. பொலிவு; பொய்யிலா**
**நிற்பின் நின்றன நீதி; மாதரார்**
**அற்பின் நின்றன அறங்கள்; அன்னவர்**
**கற்பின் நின்றன கால மாரியே**

**...என்ற பாடலில் முதல் இரண்டு அடிகள் ஆண்களுக்கும், பின் இரண்டு அடிகள் பெண்களுக்குமாகச் சொல்லப் பெற்றன என்ற கூற்று உண்டு. இந்தப் பாடலை எல்லோருக்குமே பொதுவாகக் கொள்வதா அல்லது பெண்களுக்கு மட்டுமே, ஆண்களுக்கு மட்டுமே என்று இரண்டு பேரையும் பாகுபடுத்திப் பாடப்பெற்ற பாடலா இது?**

இந்த நாட்டிலே சங்ககாலத்திலே யிருந்து ஏதோ ஆண்களுக்குச் சொன்னால் அது பெண்களுக்கும் உரியது என்ற கொள்கை வலுவாக நிலைத்திருக்கிறது. திருக்குறளிலே ஆண்மக்களுக்குச் சொல்லப்பட்டது எல்லாம் ஆண்மக்களுக்கு மட்டுமன்று, பெண்மக்களுக்கும் என்று எல்லோரும் ஒத்துக்கொண்டிருக்கிறார்கள். இந்தப் பாடலிலே உள்ள நான்கு அடிகளும் இருபாலாருக்கும் பொதுவானது என்பதிலே எந்தவிதமான ஐயப்பாடும்

இல்லை. பொதுவாக இருப்பினும், மூன்றாவது அடியிலே வருகின்ற ஒன்று பெண்களுக்கு என்று தனிப்படக் கூறுகிறார். காரணம், உபசரிக்க வேண்டியது. இல்லற தர்மத்தை நடத்துவது அவர்களது கடமையாதலால் இதனைத் தனியே எடுத்துச் சொல்கிறார். இது- கம்பன் சொல்வது சரிதான் என்பதற்கு ஆற்றுப் படலம் (பால காண்டம்) முதற்பாட்டே உதாரணமாகும்.

**ஆசலம் புரி ஐம்பொறி வாளியும்**

**என்பதிலே ஐம்பொறி என்பதனாலே எல்லாம் அடங்கிப் போகிறது.**

**காசு அலம்பு முலையவர் கண் எனும்**

**பூசல் அம்பும்**

என்று மறுபடியும் ஏன் எடுத்துச் சொல்கிறார்? ஐம் பொறிகளையும் முதலில் பொதுவாகச் சொல்லிவிட்டு, அடுத்து கண் என்னும் பொறியைச் சிறப்புப்படுத்திச் சொல்கிறார். அதுபோல, அந்தப் பாடலில் ஆண், பெண் இருபாலாருக்குமாகச் சொல்லிவிட்டு, பெண்களுக்கென்று சிறப்பாக மூன்றாவது அடியைச் சொல்கிறார் என்று நினைப்பதிலே தவறு இல்லை.

**10. 'வந்து எனைக் கரம் பற்றிய வைகல்வாய்**

**இந்த இப்பிறவிக்கு இரு மாதரைச்**

**சிந்தையாலும் தொடேன் என்ற செவ்வரம்**

**தந்த வார்த்தைதிருச்செவிசாற்றுவாய்''**

**என்று ஆஞ்சநேயரிடம் சீதாபிராட்டி சொன்னது இராம பிரானுடைய பெருமையைக் குறைப்பதாகவோ அல்லது சீதையினுடைய பாத்திரப்படைப்பைக் குறைப்பதாகவோ இருக்கிறது என்று கருதலாம் அல்லவா?**

இப்படி உங்களுக்குச் சந்தேகம் வரும் என்றுதான் கம்பன் அந்தப் பாட்டிலே ஒர் அற்புதமான சொல்லைச் சொல்லியிருக்கிறான்.

கணவன் மனைவியரிடத்தே இடைப்பிறவரலாக நடைபெறுகின்ற ஓர் உரையாடல். அதை வேறு யாரும் ஒட்டுக் கேட்டிருக்க முடியாது. ஆகவே, அதைச் சொல் வதன் மூலம் தான் உண்மையிலே, சீதைதான் என நிரூபிக்க வேண்டுமென்று பிராட்டி நினைக்கிறாள். நைஷ்டிக பிரம்மசாரியாகிய அனுமன் அதனுடைய அருமைப்பாட்டினை உணராமல் எங்கே நாலு பேர் இருக்கையில் உளறிவிடுவானோ என்று திருச்செவி சாற்றுவாய்' என்று, காது பக்கத்திலே போய்ச் சொல்லு அப்பா - இது ப்ரிவிலேஜ்ட் கம்யூனிகேஷன் (Privileged Communication) - எனக்கும் என் தலைவனுக்கும். அதை ஏன் உன்கிட்டே சொல்கிறேன் என்றால், அவன் நம்பணும் என்பதற்காகச் சொன்னேன். நீ போய்ப் பத்துப் பேர் இருக்கும்பொழுது உளறித் தொலைக்காதே என்கிறாள். திருச்செவி சாற்றுவாய்' என்றால் இன்றைக்குக் கூட வாய் புதைத்து, காது பக்கத்திலே போய்ச் சொல்லுகிறார்களே அதுபோலச் சொல்லு என்கிறாள். இதனால் பிராட்டியினுடைய எல்லையற்ற அறிவுக்கூர்மையைத் தெரிந்துகொள்கிறோம்.

இதற்கு மாறுபட்ட அடிப்படை ஒன்று இருக்கிறது. பிராட்டியினுடைய அடையாளத்தைச் சொன்ன இராகவன்-தான் மிதிலைக்குள் நுழைந்தபோது மாடியில் அவள் இருந்த அடையாளத்தைச் சொன்னான்.

அவள் மருந்துச் செடிபோலக் காய்ந்து கிடக்கிறாள் காட்டிலே. அப்படித்தானே இலங்கையில் போய் இருக்க முடியும். இப்படிப்பட்ட அடையாளத்தைச் சொல்லாமல் பிராட்டியின் பழைய அடையாளத்தைச் சொல்லப்போக, ஆஞ்சநேயன் அதை நம்பிக்கொண்டு போய் அங்கு ஒவ்வொரு அழகுள்ள பெண்ணாகத் தேடி, மண்டோதரியைக் கூடச் சீதை என்று ஐயப்படுகிற பைத்தியக்காரத் தனத்தைச் செய்கிறான். ஏன்? அது இராமன் செய்த தவறு. பிராட்டி அதைச் செய்யவில்லை. மிக ஜாக்கிரதையாகத் திருச்செவி சாற்றுவாய் என்கிறாள். ஆக, இதிலே அவர்கள் இரண்டு பேருடைய பெருமையும் மலைபோல உயர்ந்திருக்கிறதே தவிர நீங்கள் நினைப்பதுபோலக் குறை ஒன்றும் இல்லை.

11. **ஒரு பகல் பழகினார் உயிரை ஈவரால்' என்கிற பாடலில், எரியிடைக்கடிது வீழ்ந்து இறப்பேன் எனப் பிராட்டி கூறுவது, இந்தக் கால கட்டத்தில் பெண்கள் நம்மை மிரட்டுவதற்காக ஒரு சொல்- எதற்கெடுத்தாலும் தற்கொலை செய்து கொள்கிறேன் என்று சொல்கிறார்களே- இதற்கு முன்னோடி யாகச் சீதாபிராட்டி இருந்தாள் என்று நினைக்கத் தோன்றுகிறது. இது சரியா?**

பிராட்டியைக் கொண்டுபோய் நம்மோடு சேர்க்க வேண்டிய தேவையில்லை. அவள் இருக்கட்டும்.

எப்படிப்பட்ட சூழ்நிலை என்று தெரியவேண்டும். அன்புக் கண்ணாடி போட்டுவிட்டால். பயில்வானாக இருப்பான் மகன்- ஆனால் அவன் ஒரு தவலையைத் தூக்கினான் என்றால் அவன் தாய், அடடே தூக்காதேடா, மூச்சைப் பிடிச்சுக்கும் என்பாள். இது அன்பினாலே விளைந்த ஒன்று. அப்படிப் பிராட்டியைப் பொறுத்த மட்டில்-இராகவன் பரம்பொருளாக இருந்தாலும் அவளைப் பொறுத்தமட்டில் கணவன். தன் கணவனுக்கு ஆபத்து வந்துவிட்டது என்று நினைக்கிறாளே தவிர இலக்குவனைப் போலப் பெருமானை எடை போடுகின்ற சூழ்நிலையிலே மனைவி இருக்க முடியாது.

நன்றாகக் கவனிக்க வேண்டும். இலக்குவன் சொல்கிறான். யாரென நினைத்தீர் அக்கமலக் கண்ணனை என்று. நீங்கள் கல்யாணம் செய்துகொண்டீர்களே அந்தப் பெருமான் யார் என்று நீங்கள் தெரிந்துகொள்ள வில்லையே' என்று வருத்தப்படுகிறான்.

தெரிந்துகொள்ள முடியாது. அவள் அன்புக் கண்ணாடி போட்டிருக்கிறாள். ஆகையினாலே இதிலே நீங்கள் நினைக்கிறபடி இந்தக் காலம், அந்தக் காலம் ஒன்றும் கிடையாது. அவளுடைய சூழ்நிலையிலே இந்த முடிவு நியாயமானது. அவளைப் பொறுத்த மட்டிலே பரம்பொருள் என்று நினைக்கவில்லை. அவளுடைய கணவன்- அவனுக்கு ஒர் ஆபத்து- இப்போது மற்றொரு ஆண்மகனாகிய இவன் போய்க் காப்பாற்றவில்லை என்றால் வேறு என்ன இருக்கிறது. வெருவலை' என்று

சொல்கிறாள். 'லட்சுமணா என்ற சொல் கேட்டவுடன் உன் உடம்பு பதறி இருக்கணும். உதறவில்லையே' என்று கேட்கிறாள். அவளைப் பொறுத்தமட்டில் உதறுவதுதான் நியாயம். இளையபெருமானைப் பொறுத்தமட்டில் இராமன் இன்னார் என்று தெரிந்தவன். அதனாலே உதறுகிற பிரச்சினை இல்லை. அவ்வளவுதான்.

**12. இராமபிரான் வாலியைக் கொல்வது குறித்து எடுத்த முடிவு அவசரமானது என்பது சிலர் கருத்து. இதனை அரண் செய்வதுபோலக் கவிச் சக்கரவர்த்தி பாடிய இடம் ஒன்று உண்டு.**

**பரிவு இலன் ஒருவன் தன் இளையோன்**

**தாரம் வெளவினன் என்ற சொல் தரிக்குமாறு உளதோ?**

**- என்பது கவிச்சக்கரவர்த்தி வாக்கு. எனவே, வாலியைக் கொல்வது குறித்து இராமபிரான் எடுத்த முடிவு அவசரமானது என்பது கம்பருக்கும் உடன்பாடாகும் என நாம் கூறலாமா?**

இந்தக் கருத்தை ஒரளவுக்கு நானும் ஒத்துக்கொள்கிறேன். ஆனால் அவசர முடிவு என்று சொல்வதைவிடச் சூழ்நிலை காரணமாக அவன் எடுத்த முடிவு என்று சொல்லவேண்டும். அந்தச் சூழ்நிலையை நன்றாகச் சிந்தித்துப் பாருங்கள்.

கை அறுதுயரம் நின்னால் கடப்பது கருதி வந்தோம் என்று சுக்கிரீவனிடத்தில் இராமன் பேசுகிறான். இதை விட வருந்ததக்க கூற்று (Statement) இராமாயணம் முழுவதிலும் கிடையாது. அதை, காதில் வாங்கிக் கொள்ளாமல் சுக்கிரீவன் என் அண்ணன் அடிச்ச அடியைப் பாரு' என்று தன்முதுகைத் திருப்பிக் காட்டுகிறான். இராமபிரான் வருந்துகிறான்- இப்படி ஒரு பரிதாபகரமான ஜந்துவா? என்று. அந்தச் சூழ்நிலையிலே அவனுடைய மனம் முழுவதும் எதிரிலே இருக்கின்றவனுடைய பரிதாபகரமான நிலையைப் பார்த்துக் கலங்கிவிடுகிறது. அப்பொழுதுதான் சுக்கிரீவன் சொன்னதையெல்லாம் கேட்டவுடனே ஒரு முடிவு- யார் எதிரி என்பதைப் பற்றிச் சிந்திக்கவே இல்லை இராகவன் அதனாலேதான்,

**...வானிடை மண்ணில் நின்னைச்**

**செற்றவர் என்னைச் செற்றார்- உன்னோடு உற்றவர் எனக்கும் உற்றார் உன் கிளை எனது...'**

என்று சொல்கிறான். இது அவசரம் என்பதைவிட உணர்ச்சிப் பெருக்கிலே ஏற்பட்ட ஒரு முடிவு. அது எல்லாருக்கும் உரியதுதான். கையறு துயரத்தோடு வந்திருக்கிறான். தன்னைவிடத் துயரம் அடைந்திருப்பவனைப் பார்க்கிறான். சாதாரண மனிதனாக இருந்தால் 'நான் இதைச் சொல்லும்போது அவன் காதில் வாங்கிக் கொள்ளவில்லையே' என்று ஒதுங்கியிருப்பான். பரம கருணையுடையவனாகிய பெருமான் தன்னுடைய துயரத்தை மறந்து தன்னைவிட அதிகம் துயரம் அடைந் திருக்கிறானே இவன் என நினைக்கும்போது அவனுக்கு ஆறுதலாக இந்த முடிவை எடுத்துவிடுகிறான்.

13. **இராமன் புகழ்பட வந்த கம்பன், இராவணன், இந்திரஜித் ஆகியவர்களையும் புகழ்கிறானே, இதற்குக் காரணம் என்ன?**

இது எல்லாக் காப்பியப் புலவர்களும் கையாளுகின்ற ஒரு வழி. எதிரியை எவ்வளவுக்கெவ்வளவு புகழ்கிறார்களோ அவ்வளவுக்கவ்வளவு அந்தப் புகழ் எல்லாம் இங்கே வந்து சேரும். அதில் ஒன்றும் தவறு இல்லை. சாதாரணமாக எலியை அடித்தான் இராமன் என்று சொன்னால் இதில் என்ன பெருமை இருக்கிறது!

வில்லாளரை எண்ணில் விரற்குமுன் நிற்கும் வீரன் (8006) ஆகிய இந்திரஜித்தனைப் போன்ற - அத்தனை பலங்களைப் பெற்றிருக்கிற இராவணனைப் போன்ற வீரனை வென்றான் ஒருவன். இது பெருமை என்றால் கூட்டு ஒருவரையும் வேண்டாக் கொற்றவன் என்று சொல்லிவிட்டு ஐம்பதாயிரம் குரங்குகளைக் கூட்டிக் கொண்டு போனான் என்றால் இவைகளை யெல்லாம் வைத்துக்கொண்டு வெல்லணுமா? இல்லை. எதுவும் செய்ய முடியும். ஆனால் இவர்கள்மாட்டுக் கொண்ட கருணையினால்- தாங்களும் ஏதோ உதவி செய்தமாதிரி திருப்தி. அந்தக் குரங்குகளுக்கு எல்லாம். பெருமானுக்கு நாங்களும் துணையாகப் போனோம் என்ற ஒரு மன அமைதியைக் கொடுக்க வேண்டும். அவ்வளவுதான். ஆகவே எத்தகைய

பகைவர்களை வென்றான் என்பதைக் குறிப்பதன் மூலம், அத்தனை புகழும் இங்கே வந்து சேருகிறது என்பது காப்பிய உத்தி. ஆகையினாலே கவிச் சக்கரவர்த்தி அதை அற்புதமாகப் பயன்படுத்துகிறான்.

**14. அனுமன் கடலைத் தாண்டுவது, விச்வரூபம் எடுப்பது, சின்னஞ்சிறிய உருவம் கொள்வது போன்ற இவ்வளவு நம்ப முடியாத நிகழ்ச்சிகள் வேண்டுமா? இயற்கை இறந்த நிகழ்ச்சிகளைக் கவிஞர்கள் ஏன் பாடுகிறார்கள்?**

இயற்கை இறந்த நிகழ்ச்சி என்பதே ஒரு பொருள் இல்லாத சொல். இயற்கை என்றால் என்ன? நீங்களாக ஒரு முடிவுக்கு வந்துவிட்டீர்கள். நம்முடைய காலத் திலேயே யோகப் பயிற்சியின் மூலம் The power of the mind என்று அமெரிக்காவில் ஒரு நீண்ட படம் எடுத்து டி.வி.யிலே போட்டுக் காட்டினார்கள். மனவலிமையை அறிந்துகொள்வதற்காக ஆர்வாடிஸ்காவில் இருந்தும், பிரிட்டனில் இருந்தும் ஒரு கூட்டம் திபெத்துக்கு வருகிறது. சாதாரணப் பௌத்த துறவிகள் எத்தனை மாபெரும் செயல்களைச் செய்கிறார்கள் என்பதனை வீடியோப் படமாகக்கூட எடுத்து வைத்திருக்கிறார்கள். மாபெரும் வீரர்கள், ஒரு கையை நீட்டி அத்தனை பேரையும் வென்றுவிடுவார்கள். அவர்களை ஒன்றுமே பண்ண முடியவில்லை. அடுத்த படியாகப் பனிக்கட்டியிலே வெற்றுடம்போடு போய் உட்காருகிறார்கள். ஒண்ணுமே பண்ணவில்லை. இ.ஸி.ஜி. (BCG) எடுக்கிறார்கள். திடீரென்று ஃப்ளாட்டாக வருகிறது. அந்தப் படத்தைப் போட்டுக் காண்பிக்கிறார்கள். ஹார்ட் நின்று போச்சு- இதுவும் நடக்கிறது. B/P பார்க்கிறார்கள். 120/90 திடீரென்று 230க்கு உயர்கிறது. இதெல்லாம் இன்றைக்கும் நடக்கிறது. இயற்கை இறந்தது என்று ஒன்றும் கிடையாது. மனிதனுடைய ஆற்றல்- நீங்கள்

நினைக்கிறதுபோல் சாதாரண ஆற்றல் இல்லை. இறைவன் என்றைக்கு நம்மைப் படைத்தானோ அன்றைக்கே தனக்குரிய முழு ஆற்றலையும் நமக்குத் தந்திருக்கிறான். நாம் பயன்படுத்துவதில்லை. அவ்வளவுதான். பலகோடி நியூரான்கள் இருக்கின்றன நம் மண்டையில். நாம் உபயோகப்படுத்துவது ஒரு பர்சன்ட்தான். ஐன்ஸ்டின் கூட

12 பர்சென்ட்தான் உபயோகப் படுத்தினார் என்கிறார்கள். அதிகமாக உபயோகப்படுத்த ஆரம்பித்தால், கந்துக மதக்கரியை அடக்குவது, தண்ணிரில் நடப்பது என்றெல்லாம் செய்யலாம். ஒன்றும் அதிசயம் இல்லை. இயற்கை இறந்தது என்று பட்டம் கொடுக்கிறதே சரியில்லை.

இயற்கைதான் உதவுகிறது. இயற்கையின் உதவி கொண்டுதான் இதையெல்லாம் செய்கிறார்கள். உங்களுடைய ஆற்றலை வளர்த்துக் கொள்வீர்களானால் நீங்களும் செய்யலாம். இதைக் கவிச் சக்கரவர்த்திதான் முதன் முதலிலே கண்டுபிடித்தான்.

**அந்த அப்பாவி சுக்கிரீவன் கூற்றாக,**

**வேறுள குழுவையெல்லாம் மானுடம் வென்றதம்மா**

என்று சொல்வதன் மூலம் இயற்கை இறந்தது என்று ஒன்றும் கிடையாது என்று கம்பன் தெரிவிக்கிறான். யோகப் பயிற்சி உடையவர்களே இன்றைக்குச் செய்கிற காரியத்தை அனுமன் செய்கிறது என்ன பெரிய காரியம்! ஆகவே பெரிதாக வளர்வதும், சிறியதாகக் குறுகுவதும் சாதாரண- அணிமா, லகிமா, மகிமா என்று சொல் வார்கள்- அஷ்டமா சித்திகள். அது சாதாரண சமா சாரங்கள். அதை விளம்பரப்படுத்துவதற்காகச் செய்ய வில்லை. தேவை ஏற்படும்போது இன்றைக்குக்கூட இதைப் பெரியவர்கள் உபயோகப்படுத்துகிறார்கள். என்னுடைய சிறு அனுபவத்தில் பார்த்திருக்கிறேன்.

இன்னொரு நாட்டிலே வாழ்ந்த ஒரு யோகி ஒரே நேரத்தில் ஒர் இடத்தில் இருந்த ஒரு கலெக்டர் அவர் மனைவி ஆகியோரிடம் பேசிக் கொண்டிருக்கும்போது 450 மைலுக்கு அப்பால் கதிர்காமத்திலிருந்தும் பேசிக் கொண்டிருந்தார். இதைக் கண்ணாலே பார்த்திருக்கிறேன். அதனாலே இயற்கை இறந்தது என்று ஒன்றும் கிடையாது. அனுமன் செய்தது சாதாரணச் செயல். இராமன் என்ற பெருமானுடைய தொண்டனாகிவிட்டவனுக்கு இது என்ன பிரமாதமான செயல் -கடலைத் தாண்டுவது!

**15. கங்கைவேடன் காளத்திவேடனின் மறுபதிப்பா?**

**காளத்தி வேடன் கங்கை வேடனின் மறுபதிப்பா?**

இது என்ன பதிப்பு? இப்போ முன்னாலே வந்தவன் கம்பன். நான் என்னுடைய சிற்றறிவின்படி கூறுவேன். தொண்டுக்கு ஒரு வடிவம் கொடுத்துப் பெரிய புராணம் இயற்றினாரே, அவரே கம்பனைப் பார்த்துத்தான் இயற்றினார்.

தொண்டு என்கிற ஒரு பண்புக்கு அனுமன் மூலமாக வடிவு கொடுத்தான் கம்பன். சேக்கிழார் அதைப் பார்க்கிறார். மூன்று நூற்றாண்டுகள் தாண்டிவிட்டன. இராமாயணத்திலே உள்ள அத்தனை பாத்திரங்களிலும் ஒரு பாத்திரம் அனுமன். இதை நினைக்கிறார். இது இன்றைக்கு நாட்டுக்குத் தேவை. எனவே, இராமாயணத்தி லிருந்து அனுமனைப் பிரித்து எடுக்கிறார். அனுமன் என்று சொன்னாலும் தொண்டு என்று சொன்னாலும் ஒருபொருட் பன்மொழி. இதற்கு ஒரு வடிவு கொடுக் கிறார். 63 வரலாறுகளாகப் பாடுகிறார். ஆகவே, One is complimentary to the other. ஆகையினால் கங்கை வேடன் காளத்திவேடனின் மறுபதிப்பா, காளத்திவேடன் கங்கை வேடனின் மறுபதிப்பா என்ற பிரச்சினை இல்லை.

**16. தயரதன் வாய்மை தவறக்கூடாது என்பதை நிறுவக் கைகேயி இரு வரம் கேட்டாள் என்று அவளைக் குறிப்பிட்டிருக்கிறீர்கள். ஏவா மகவைப் பிரிந்து இன்று எம்போல் இடர் உற்றனை நீ போவாய் அகல்வான்' என்பதான சாபத்தின் கருவழி மாற்றவே கைகேயி இப்படி வரம் கேட்டாள் என்று சொல்வது இன்னும் சிறப்பல்லவா?**

மகனை இழந்த தாய் தந்தையர் மகன் பிரிவால் நீ வீடு பேற்றை அடைவாய் அல்லது இறப்பாய் என்றுதான் சாபம் கொடுத்தார்களே தவிர - பிரிவாகவும் இருக்கலாம்- சாவாகவும் இருக்கலாம். அதைக் கைகேயி நினைந்தாள் என்பதை எப்போதும் ஏற்றுக்கொள்ள நான் தயாராயில்லை.

அதைவிடப் பெரிய கொடுமை- கன்னிகா சுல்கத்தில் அவன் சொல்லிய வார்த்தையை மீறி அவன் இப்போது இராமனுக்குப் பட்டம் கட்டுவது. அதனாலேயே அவன் நரகத்திற்குப் போகவேண்டிய சூழ்நிலை உருவாகும். அதிலிருந்து அவனைக் காப்பாற்ற வேண்டுமென்பதுதான்-

தற்காத்துத் தற்கொண்டான் பேணுவது தான்- அவள் கடமை. அந்த முறையில் செய்தாளே தவிர, இராமனுக்குப் பட்டம் கட்டியிருந்தால் அவன் இறந் திருப்பான் என்று நினைப்பதற்கு எந்தவிதமான அடிப்படையும் இல்லை. மகன் இறந்து அந்தத் துயரத்தை அனுபவிக்க வேண்டுமென்றால் அது பட்டம் கட்டித்தான் இறக்க வேண்டுமென்று எங்கே இருக்கிறது? அதை நான் ஏற்றுக்கொள்ளத் தயாராயில்லை.

**17. மைந்தன் அலாது உயிர் வேறு இலாத மன்னன் தசரதன். பிள்ளைகளில் இராமனையே பெரிதும் விரும்பினான். இது அவனது குறை அல்லவா? மற்றப் புதல்வர்களிடம் அவன் என்ன குறை கண்டான்?**

இதற்குத் தசரதன்தான் விடை சொல்ல முடியும். நீங்கள் சொன்னது முற்றிலும் உண்மை. அவன் பெருந் தவறுதான் செய்தான். இராமனைத் தவிர வேறு பிள்ளைகள் தனக்கு இருப்பதாக அவன் நினைவில் கொள்ளவில்லை. இதற்கு அரணாக நானும் ஒர் இடத்தைக் காட்ட முடியும்.

வந்த விசுவாமித்திரன் நின் சிறுவர் நால்வரினும் கரிய செம்மல் ஒருவனைத் தந்திடுதி என்றுதான் சொன்னான். இராமன் என்று சொல்லவில்லை. கரிய செம்மல் என்று அடையாளம் சொன்னான். இரண்டு பிள்ளை சிவப்பு - இரண்டு பிள்ளை கறுப்பு. கரிய செம்மல் என்று சொன்னவுடன் ஏன் பரதன் நினைப்பு இவனுக்கு வரவில்லை?

ஆக, இராமனைத் தவிர இவனுக்கு வேறே தியானமே கிடையாது. அந்தக் குறைதான் அவனைச் சாக அடித்தது. வேறு ஒன்றுமில்லை. இராமன் பிரிவு அல்ல. நான்கு பிள்ளைகளைப் பெற்றும் ஒரு மகனிடத்திலே அளவுக்கு மீறி அன்பு காட்டினானே, அதுதான் அவனுடைய குறைக்குக் காரணமாக இருந்தது என்பதைக் கவிச்சக்கரவர்த்தி காட்டிச் செல்கிறார். ஆகவே அதை ஏற்றுக் கொள்ளலாம். -

**18. சிலம்பில் ஊழ்வினையை இளங்கோவடிகள் வற்புறுத்தி யதைப் போலவே கம்பநாடனும் தன் காவியத்தில் விதியினை வலியுறுத்துகிறானா? அல்லது வேறு ஏதாவது வேறுபாடு உண்டா?**

இந்த நாட்டினுடைய மிக அடிப்படையான கொள்கை வினைக்கொள்கை. சமணர்களுக்கும் அது உடன்பாடு. பௌத்தர்களுக்கும் அது உடன்பாடு என்பது ஒருபுறம் இருக்க- இந்த வினை உருத்துவந்து ஊட்டும் என்பதிலே சில கருத்து மாறுபாடுகள் சைவர்களுக்கும், வைணவர்களுக்கும், சமணர்களுக்கும் உண்டு, ஆனால் அது ஊட்டியே தீரும் என்பதில் எந்தவிதமான ஐயப் பாடும் இல்லை. இனி அதற்கு விளக்கம் தருகிற முறையிலே ஒரே பாத்திரத்தை இரண்டு வகையாகப் பேச வைக்கிறான் கவிச்சக்கரவர்த்தி.

இராமனுக்குப் பட்டம் இல்லை, பரதனுக்கு என்று சொன்னவுடனே இலக்குவன் எல்லையற்ற சினத்தோடு 'விதிக்கும் விதி ஆகும் என் வில்தொழில் காண்டி என்று பேசுகின்றான். அதே இலக்குவன் மனம் மாறி, பிராட்டி வருந்தி இராமனைத் தேடிக்கொண்டு செல் என்றபோது, வெஞ்சின விதியினை வெல்ல வல்லமோ? என்று பேசுகின்றான்.

ஆகவே விதிக்கொள்கை இரண்டு பேருக்கும் உடன் பாடு என்பதிலே எந்தவித ஐயப்பாடும் இல்லை. சிலப்பதிகாரத்தைப் பொறுத்தவரையில்-வினைக் கொள்கைக்கு மிகவும் அழுத்தம் கொடுத்துச் சில பகுதிகள் வருகின்றன. கோவலன் கொலையுண்டதற்குக் காரணம், ஊழ்வினையே என்கிறார். அந்த அளவுக்குக் கம்பன் அதை ஏற்றுக்கொள்ளவில்லை என்பதுதான் விடையாகும்.

### 19. சுந்தர காண்டம் சீதையின் பெருமையைப் பேசுவதா? அல்லது அனுமனின் சிறப்பைக் கூறுவதாக எழுந்ததா?

கவிச்சக்கரவர்த்தியினுடைய ஈடு இணையற்ற புலமைச் சிறப்புக்குச் சுந்தர காண்டம் ஓர் அடையாளம். வான்மீகத்தில்கூட இன்றைக்கும் சுந்தரகாண்டத்திற்கு ஒரு தனிச்சிறப்பு உண்டு. அதைத் தினம் பாராயணம் பண்ணினால் பயனுண்டு என்று நம்புகிறவர்கள், செய் கிறவர்கள் உண்டு. தமிழிலே சுந்தர காண்டம் மிகமிக உயர்ந்தநிலைக்குப் போய்விடுகிறது. இரண்டு பாத்திரங்கள் - ஒன்று ஏவல்கூர் பணி

செய்கின்றேன் என்று சொல்லிக்கொள்கிறானே அனுமன், அந்தப் பாத்திரம். மற்றொன்று புருஷகார வைபவத்தின் உறைவிடமாக இருக்கின்ற பிராட்டியின் சிறப்பு. இந்தப் பிராட்டியினுடைய சிறப்பை எப்படி வெளிப்படுத்துவது?

இராமன் சொன்னால் அது அர்த்தமற்றதாகப் போய் விடும். வேறு பாத்திரங்கள் சொன்னால் அது பொருத்தமற்றதாக ஆகிவிடும்.

ஆக, மிக அற்புதமாகக் கம்பன் ஒர் அடிமையை வைத்துப் பிராட்டியின் சிறப்பை இமயமலையின் உச்சிக்குக் கொண்டுசெல்கிறான். அப்படிச் சொல்லுகின்ற அதே நேரத்தில் இவனுடைய சிறப்பும் வெளிப்படுகின்றது.

ஆகவே, இரண்டு பேருடைய சிறப்பையும் ஒன்றுக் கொன்று(background) அடித்தளமாக இட்டு, இரண்டையும் ஈடு இணையற்ற முறையிலே படைத்துக் காட்டுவதற்குச் சுந்தர காண்டத்தை ஒரு கருவியாகக் கொள்கிறான் என்று நினைப்பதிலே தவறு ஒன்றும் இல்லை.

**20. சரணாகதியைப் பற்றியும், அறம் வளர்த்தல் பற்றியும், நன்றி பற்றியும், வாய்மை காத்த வள்ளல் என்று தயரதனைப் பற்றியும்- இப்படி எல்லாப் பொருள்களையும் முதல் 5 காண்டங்களிலே ஆறாயிரம் பாடல்களிலே (6058 பாடி முடித்த கம்பன் போர்ச் செய்தியை மட்டும் கூறுவதற்கு யுத்த காண்டத்தை நாலாயிரம் பாடல்களாக (4310) அவ்வளவு விரித்துப் பாட வேண்டிய அவசியம் என்ன?**

**அந்தப் போரைப்பற்றிப் பாடவேண்டும் என்பதுதான் அவன் கருத்தா?**

முன்பு ஒரு கேள்விக்கு விடை கூறும்போது'பல்லவப் பேரரசு வீழ்ச்சி அடைந்துவிட்டது. சோழப் பேரரசு தொடக்கத்தில் இருக்கிறது என்று கூறினேன். அதை மறுபடியும் நினைவுக்குக் கொண்டு வர விரும்புகிறேன். பல்லவர்கள் தமிழர்கள் அல்லர் என்பது இப்போது நிரூபிக்கப்பட்டுவிட்ட ஒன்று. தமிழர்களுடைய ஆட்சி என்பது சோழர்களுடைய ஆட்சிதான். அது வருவதற்கு ஒரு நிலைக்களம் அமைக்க வேண்டும். சோழர்கள் ஆட்சி

வருவதானால் வீழ்ச்சி அடைந்த பல்லவர்கள், கிழக்குச் சாளுக்கியர்கள், மேற்குச் சாளுக்கியர்கள், புலிகேசி போன்ற எத்தனையோ பகை சுற்றியிருக்கிறது. இத்தனை பகைகளையும் வென்றுதான் சோழப் பேரரசு நிலைகொள்ளவேண்டும். அப்படி நிலைகொள்வதானால் போரிட்டுத்தான் நிலைகொள்ள முடியும். அப்படிப் போரிடும்போது எப்படிப் போரிட வேண்டும் என்பது மிக இன்றியமையாத ஒன்று.'Ends justify the means' என்று சொல்கிறோமே, அதுபோல எதையாவது செய்து காரியத்தைச் சாதித்துவிட வேண்டுமென்ற கொள்கையைத் தமிழர்கள் ஏற்றுக்கொண்டதே இல்லை.

வழியும் தூய்மையாக இருக்க வேண்டுமென்று மகாத்மா சொன்னாரே, அது தமிழர்களுடைய பழைய கொள்கை. அந்த முறையிலே போரிட வேண்டும். அதாவது, அறத்தின் அடிப்படையில் நின்று போரிட வேண்டும். 'அறநெறி முதற்றே அரசின் கொற்றம்' என்பது தமிழர்களுடைய கொள்கை. அந்தக் கொள்கையின் அடிப்படையிலே இந்த நாலாயிரம் பாடல்களைப் பாடுகிறான். அறத்தின் மூர்த்தி போரிடுகின்றான். அவர்களுடைய படையை நோக்க- இவனுடைய படை-படை என்று சொல்வதற்குத் தகுதியில்லாத படை என்றாலும் - அறம் இவனுக்குத் துணையாக நிற்கிறது. எதிராளி படை பலத்தின் எல்லையிலே நின்றாலும் அறத்தின் அடிப்படையில் இல்லாமையாலே அது தோற்கத்தான் செய்யும் என்பதை எடுத்துக்காட்டுவது மிக இன்றியமையாதது.

இந்தச் சோழப் பேரரசு இந்த அறத்தின் அடிப்படை யிலே செல்லவேண்டுமென்று கம்பன் நினைக்கிறான். அப்பொழுதுதான் கிழக்குச் சாளுக்கியர், மேற்குச் சாளுக்கியர், புலிகேசி முதலானவர்கள், பல்லவர்கள் இவர்களை யெல்லாம் வெல்ல முடியும் என்பதை எடுத்துக்காட்டுவதற்காக இதை ஒரு கருவியாகப் பயன் படுத்துகிறான். ஆனால், மாபெரும் கவிஞன் ஆதலாலே, இதை வெளிப்படையாகக் காட்டமாட்டான். உள்ளுறைப் பொருளாகக் கருத்தை அமைத்துப் பாடுகிறான். இந்தச் சமுதாயம் முன்னேற வேண்டுமானால் அற அடிப் படையில் நின்று போரிடவேண்டும்.

மேலே உள்ள அத்தனை பகைவர்களோடு இவர்கள் போரிட வேண்டும். ஆகவேதான், இராவணாதிகளுடைய பலங்களையெல்லாம் பெரிதாகக் காட்டி, இராகவன் தன்னந்தனியாக நின்று அறத்தின் அடிப்படையில் போரிடுகின்றான் என்பதைக் காட்டுகின்றான். ஆகவே நீங்கள் சொல்வது முற்றிலும் சரி. போரை இவ்வளவு பெரியதாக நாலாயிரம் பாடல்களில் பாடியதற்குக் காரணம் அன்றைய சூழ்நிலை. இந்தச் சமுதாயத்திற்குச் செல்லவேண்டிய வழியைப் புலன்படுத்த அதைக் கருவியாகப் பயன்படுத்துகின்றான்.

**21. தாயினும் உயிர்க்கு நல்கும் சபரி என்று கம்பனால் பாராட்டப் பெற்ற சவரி, இராமாயண வரலாற்றிலே இராம பிரானின் வைபவத்தைக் குறித்துக் கூறுவதற்கு அவ்வளவு பெரிதாக உதவி செய்ததாகக் காணப்பட வில்லை. கம்பராமாயணப் பாடல்களிலே 9 பாடல்களிலே இருக்கின்ற படலம். அப்படிப்பட்ட சபரியின் வரலாற்றைக் கூறத்தான் வேண்டுமா? அதற்கு ஏதாவது அவசியம் உண்டா என்பதை விளக்க வேண்டும்?**

சபரியின் வரலாறு ஒன்பது பாடல்களிலே இருக்கலாம். பெரிய தேருக்கு ஒரு சிறிய துண்டுதான் அச்சாணி. அதுபோல இராகவன் அரையும் குறையுமாக இன்னார்தான் பிராட்டியைக் கவர்ந்து சென்றிருக்க வேண்டுமென ஒரு ஹேஷ்யம் என்று சொல்லுகிறோமே, அந்த முறையில் தேடிக்கொண்டு வருகிறான். இப்போது அவன் வருகின்ற வழியில் நேராகப் போனால் வாலி கிட்டேதான் போய்ச் சேர்முடியும். வாலியினிடம் முன்னைப்பின்னே தெரியாதவனாகிய இவன் போய்த் தன் குறையைச் சொல்லியிருப்பானானால் நிச்சயம் வாலி உதவியிருப்பான். இராமகாதை நடைபெற்றிருக்கும். ஆனால், தன்னுடைய மனைவியைக் கவர்ந்து சென்றான் ஒருவன், அவனுடன் போர்புரிவதற்கு, தம்பியினுடைய மனைவியைக் கவர்ந்து சென்ற ஒருவன் துணையைப் பெறும் பரிதாபகரமான நிலைக்கு இராமன் தள்ளப் படுவான். இதை உணர்ந்தவனாகிய கம்பன் மாபெரும் ஞானியாகிய சபரி வாயிலாக, இந்த மாபெரும் குற்றம் நிகழ்ந்து,

இராகவனுக்குப் பழி வாராமலிருக்க ஒரு அற்புதமான வழியைக் கையாளுகிறான். எந்த விதத்திலும் சிறப்பு இல்லாதவனாகிய சுக்கிரீவனிடம் போவதற்கு வழி காட்டுகிறாள். சுக்கிரீவன் இரலை பர்வதத்தில் படைகள் ஒன்று மில்லாமல் இருக்கிறான். அப்படிப்பட்டவனிடத்தில் ஏன் செலுத்துகிறாள் என்றால், அவனை வைத்துக்கொண்டு போரிட்டால் அறத்தின் மூர்த்தி யினுடைய கொள்கை நிறைவேறும். வாலியைத் துணைக்கு அழைத்திருந்தால் அது பெருந் தவறாக முடிந்திருக்கும். ஆகவே diversional way என்று சொல்லு கிறோமே-வழிமாற்றி, சுக்கிரீவனிடம் போகுமாறு செய்கிறாள். ஆகையினாலே சபரி உதவி மாபெரும் உதவி என்பதை மறுப்பதற்கில்லை.

**22. இலக்குவன் ஊர்மிளையிடம் சொல்லிக்கொண்டு காடு போனதாகக்கூடச் செய்தியில்லை. பரதன் தன் மனைவியின் உணர்ச்சியைச் சிறிதும் பார்க்காமல் 14 ஆண்டுகள் இந்திரியங்களை வென்று நந்தியம்பதியில் தங்கிவிடுகிறான். சத்துருக்கனனைப் பற்றிச் சொல்லவே வேண்டாம். அவனுக்கு மனைவி ஒருத்தி இருந்ததாகக் கூடச் செய்தியில்லை. இராமனோ சீதையை நெருப்பில் இறங்கச் சொல்லத் தயங்கவில்லை. வாலி தாரை சொல்லை மதிக்கவில்லை, மண்டோதரி போன்ற உத்தமி இருந்தும், அவளுக்குத் தெரிந்தே சீதையைச் சிறை வைக்கிறான் இராவணன். பெண்ணுக்கும் பெண்மைக்கும் இராமாயணம் சிறப்புத் தரவில்லை என்பது மட்டுமன்றிக் கேவலப்படுத்தவும் தயங்கவில்லை. கவிச்சக்கர வர்த்திக்கு இது அடுக்குமா?**

இந்த நாட்டினுடைய வரலாற்றைப் பார்ப்போமே யானால், வேதகாலம் முதற்கொண்டு பிற்காலம் வரையில் பெண்களுக்கு முழு மதிப்புத் தந்திருக்கிறார்கள் என்பதை மறந்துவிட முடியாது. உலகம் போற்றுகின்ற மாபெரும் ஞானியும் தத்துவவாதியுமான சங்கரருக்கும் மண்டலமிச்ரருக்கும் இடையே போராட்டம் நிகழ்கிறது. அந்த வாதப்போருக்கு நடுவராக யார் அமைந்தார் என்பதை நினைத்துப் பார்ப்போமேயானால், பெருமிதம்கொள்ள

வேண்டியிருக்கிறது. மண்டலமிஸ்ரரின் மனைவியாகிய சரஸ்வதியேதான் அதற்கு நடுவர். எந்த அளவிலே இந்த நாட்டுக்காரர்கள் பெண்களைப் போற்றினார்கள் என்பதற்கு இது ஓர் எடுத்துக்காட்டு.

தமிழ்நாட்டைப் பொறுத்தவரையில் சொல்லவே வேண்டியதில்லை. சங்கப் பாடல்களிலே அத்தனை பெண்பாற் புலவர்கள் இருக்கிறார்கள். ஆக, பெண்களுக்கு மதிப்புத் தரவில்லை என்று சொன்னால் அது அத்தனை சரியில்லை. குறிப்பிட்ட சில பாத்திரங் களை எடுத்துக் கொண்டு இந்த வினா எழுப்பப் பட்டிருக்கிறது. ஒவ்வொரு பாத்திரமாக எடுத்துப் பார்ப்போமேயானால் காப்பியத்திலே குறிப்பிட்ட சில கடமைகளைச் செய்ய வேண்டியவர்கள் ஆகிறார்கள். சில sacrifice (தியாகங்கள்) செய்துதான் தீரவேண்டும் அதை யாரும் மறுக்க முடியாது.

மகாத்மா காந்தி வசதியாக வாழக் கூடியவர். அவர் இல்லறத்தில் வாழ்ந்தாரே தவிர, பிற்காலத்தில் மனைவிக்கும் அவருக்கும் எந்தவிதமான தொடர்பும் இல்லை. பகவான் இராமகிருஷ்ணர் அதே மாதிரிதான். ஆகவே இராமகிருஷ்ணர் மனைவிக்குரிய மரியாதை தரவில்லை என்று நினைத்தால் அது தவறு. சில பாத்திரங்கள் சில கடமைகளைச் செய்வதற்காக இறைவனால் படைக்கப்படுகின்றன. அந்தப் பாத்திரங்கள் அந்தக் கடமைகளைச் செய்துகொண்டு போகும்போது சிலர் துன்பம் அடையத்தான் நேரிடுகிறது. இன்றைக்கும் கூட அது நடக்கத்தான் செய்கிறது. ஒவ்வொரு வீட்டிலும் நடக்கிறது. ஆகவே ஒரு தலைவன் ஒன்றைச் செய்ய வேண்டுமென்றால் அந்தத் தலைவி விட்டுக்கொடுக்க வேண்டும். இதுபோல பரதனுடைய பாத்திரமும், இலக்குவனுடைய பாத்திரமும். இந்தக் காப்பியத்திலே இரண்டு பாத்திரங்கள் படைக்கப் பெற்றிருக்கின்றன. அவை இராமனுக்குத் தொண்டு செய்வதிலே, ஒருவன் பக்கத்தில் இருந்து செய்கிறான், இன்னொருத்தன் தூரத்தில் இருந்து செய்கிறான்.

இந்த அறத்தை வைத்துக் காட்ட வருகிறான் கவிச் சக்கரவர்த்தி. அவர்களுடைய தொண்டுதான் முக்கியமே தவிர, அவர்களோடு தொடர்ந்தவர்கள் அந்தத் தொண்டிலே

முடிந்தால் பங்கு கொள்ளலாம், இல்லை யானால் சும்மா இருக்க வேண்டியதுதான். இது அவர்களுக்குச் செய்யப்பட்ட அநீதி என்று சொல்வது ஒரு குறுகிய நோக்கம்.

பரதன் கல்யாணம் பண்ணிக்கொண்டு நம்மைப் போல் வாழ்ந்தான் என்றால், அது ஒருவேளை உயர்வு என்று நினைக்கலாம். ஆனால், பரதனாக இருக்க மாட்டான். அ.ச.வாக இருந்திருப்பான். இந்த வேறு பாட்டை மனத்திலே கொள்ள வேண்டும். ஒரு மாபெரும் காரியம் நிகழ வேண்டுமேயானால் சில பேர் தியாகம் செய்துதான் தீரவேண்டும். இராமனுக்குத் தம்பியாகப் பிறந்த காரணத்தினாலே இலக்குவனுக்குக் கொடுக்கப் பட்ட பாத்திரமும் இதேபோல்தான்.

இனி, இராவணனைப் போன்ற ஒருவனை ஒருத்தி திருமணம் செய்து கொண்டால் - உரலுக்குள் தலையை விட்டால் அது இடிக்கும்- அந்த நிலையிலும் அவள் கணவனிடத்தில் அன்பு காட்டுகிறாள் என்றால், அது அவளுடைய சிறப்பைக் காட்டுகிறதே தவிர, வேறு ஒன்றுமில்லை. இதை male chauvinism என்று சொல்லிப் புண்ணியம் இல்லை. அந்தந்தப் பாத்திரங்கள், அவை சாதாரண பாத்திரங்கள் அல்ல; அதை மறந்து விடாதீர்கள்; ஈடு இணையற்ற பாத்திரங்கள் உலகத்தில் மாபெரும் செயலைச் செய்வதற்காகப் படைக்கப்பட்ட பாத்திரங்கள். இன்சிடெண்ட்டலாகச் சில பாத்திரங்கள் அடிபடத்தான் செய்யும் ஆகவே, அதில் தவறு ஒன்றுமில்லை.

**23. காப்பியம் என்பது அரிய கலை. ஆனால் கம்பனுடைய இராமாயணத்தின் விருத்தப் பா அத்தனையையும் வெண்பாவாக மாற்றி இராமாயண வெண்பா என்று காப்பியம் செய்திருக்கிற கவிஞரின் நோக்கம் என்ன?**

**கம்பராமாயணத்தில் அவர்களுக்கு இருக்கிற ஈடு பாட்டை வெளிப்படுத்துகிறார்களா? அல்லது விருத்தத்தை வெண்பாவாக ஆக்க முடியும் என்பதாகத் தங்கள் திறனை வெளிப்படுத்தினார்களா?**

**இது போன்ற சிறப்பு கம்பராமாயணம்தவிர வேறு ஒரு நூலுக்கு உண்டா? -**

இந்த வினாவுக்கு நீங்களே விடை கூறிவிட்டீர்கள். அதாவது எங்களாலே பாட முடியும் என்பதைக் காட்டுவதுதான் அடிப்படை. அது ஒருபுறம் இருக்க. இது ஒரு புதிய முயற்சி. அவ்வளவுதான். தவறு ஒன்றுமில்லை. விருத்தப்பாவை இப்படிப் பண்ணலாமென்று, புகழேந்திதான் இதற்கு வழி வகுத்தான். அவன் வம்பு கொடுக்காதிருந்தால் வெண்பாவுக்கு இவ்வளவு மரியாதை வந்திருக்காது. அவன் போய் நளவெண் பாவைப் பாடி வைக்கப் பின்னாலே வருகிறவர்களெல்லாம் அதன் பக்கத்தில் போக வேண்டும் என முயன்றார்கள்.

விருத்தப் பாவினுடைய வீச்சு வெண்பாவுக்கு கிடையாது. அதை மறந்துவிடக் கூடாது. நம் உணர்ச்சிகளை வெளிப்படுத்துவதற்கு விருத்தப் பாவிலே இருக்கிற வீச்சு வெண்பாவுக்குக் கிடையாது. இப்படியும் பாடலாம் என்றால், அது வேறு சமாச்சாரம்.

புகழேந்தி பாடியது ஒரு நிலை. அவனுக்கு மூலமாக இருந்த கதை நைடதம். விருத்தங்களின் நடை அதிலே இல்லை. புதிதாக வெண்பாவிலே பாடினான். சரியாகப் போய்விட்டது. பின்னாலே வந்தவர்கள் விருத்தப் பாக்களிலே இருந்த இராமாயணத்தை, மகாபாரதத்தை அப்படிப் பண்ணனும் என்று நினைத்தது ஒரு புது முயற்சி. அந்த அளவிலே வரவேற்கலாம். தவறு ஒன்றுமில்லை.

**24. உலகம் யாவையும் எனத் தொடங்கும் கம்பருடைய கடவுள் வாழ்த்துப் பாடலிலே, நீங்கலா அன்னவர்க்கே சரண் நாங்களே என்ற முடிவு நாம் அனைவரும் அறிந்த ஒன்று. இதிலே, நீக்கிலா, நீங்கிலா, நீங்கிலார்- எவர் ஆனவர்க்கே சரண் என்பதாக மூன்று பாடங்கள் காணப்படுகின்றன. கம்பன் கருதியது என்னவாக இருக்கும்?**

இது இந்த நாட்டினுடைய அடிப்படைக் கொள்கை பரம்பொருள் ஒன்று உண்டு. அவனுக்குச் சரண் நாங்களே என்று. இது ஏகம் சத்' என்ற கருத்திலிருந்து அப்படியே வருகிறது. ஒருவர் -அந்த ஒருவருக்கு- எல்லா உயிர்களும் சரண் இங்கே நாங்கள் என்றால் உளப்பாட்டுத் தன்மைப் பன்மை. மனிதர்கள் மட்டுமல்ல-புல் பூண்டு

எல்லாவற்றையும் சேர்த்துக்கொள்கிறது. சரண் நாங்களே என்ற கருத்து இது. இன்று நேற்று தோன்றியது இல்லை, என்றோ தோன்றிய கருத்து. அதைக் கவிச்சக்கரவர்த்தி அழகு படுத்துகிறார். ஒருவர்தான் தலைவர் - இரண்டாவது தலைவர் இருக்க முடியாது. இந்தக் காலத்திலேயே இதற்கு எளிதாகப் பொருள் கொள்ளலாமே- ஏன் சிரமப்படுகிறீர்கள்?

**முடிவுரை**

நண்பர்கள் பலர் நன்கு கற்றவர்கள். மேலும் சிந்திப் பதற்காக இந்த வினாக்களை எழுப்பினார்கள். அவற்றுக்கு ஏதோ நான் விடை கூறிவிட்டேன் என்பது பொருள் அல்ல. அவர்களுக்கே இந்த விடை நன்றாகத் தெரியும். என்றாலும், பகிர்ந்துகொள்வதற்காக இந்த வினாக்களைத் தொடுத்திருக்கிறார்கள். அப்படி வினாக்களைத் தொடுப்பதன் மூலம் நாம் புதிய சிந்தனையில் போவதற்கு ஒரு வாய்ப்பு ஏற்படுகிறது. வினாவிடையிலேயே உள்ள சிறப்பு இதுதான்.

இதுவரையிலே நாம் அந்த முறையில் சிந்தித்திருக்க . மாட்டோம். அப்படிச் சிந்திப்பதற்கு ஒரு வாய்ப்பை ஏற்படுத்திக் கொடுத்தார்கள் என்பதுதான் இத்தகைய ஒரு நிகழ்ச்சியினுடைய அடிப்படையாகும்.

இப்போது. இராமகாதையைப் பொறுத்த மட்டிலே ஒரு அறுபது, அறுபத்திரண்டு இராமாயணங்கள் இருக்கின்றன. அண்மையிலே ஜப்பானிலிருந்து வந்த ஒருவர் கிழக்கு ஆசியாவிலுள்ள சயாம் முதலான இடங்களில் இருக்கும் இராமாயணத்தில் கம்பனுடைய செல்வாக்கும் தாக்கமும் எப்படி ஏற்பட்டிருக்கின்றன என்பதை- டோக்கியோவிலிருந்து வந்த அந்தப் பேராசிரியர் பேசக் கேட்டேன்.

ஆதிகாவியம் எழுதிய வால்மீகிக்கு ஏறத்தாழ ஆயிரம் வருஷங்களுக்குப் பின்னாலே கம்பன் வந்தான். வால்மீகி யினுடைய இராமகாதை ப்ரைமரி எபிக் (primary epic) ஆதிகாவியம் என்று சொல்லப்படும்; ஆதி காப்பியத்திலே உணர்ச்சிகளை அப்படி அப்படியே சொல்லியிருப்பார்கள். அங்கே நகாசு வேலையே கிடையாது. அதுதான் பிரைமரி எபிக்கோட லட்சணம். அந்தப் ப்ரைமரி எபிக்ஸ் - மனிதர்கள்

வளரவளர அதை அப்படியே சொல்வது என்பது பொருத்தப்படாது. ஆகவே, அதைக் கொஞ்சம் அழகுபடுத்தி- அந்த உணர்ச்சிகளையும் காட்ட வேண்டும். அதே நேரத்திலே அதை மென்மையாக-அழகு பொருந்த- tastefully என்று சொல்லுகிறோமே அந்த முறையில் சுவை ததும்பக் காட்டவேண்டும் என்பதுதான் லிட்டரரி எபிக் என்று சொல்லப்படுகின்ற இலக்கியக் காப்பியத்தினுடைய அடிப்படையாகும். அந்த முறையிலே கம்பநாடனுடைய காப்பியம் ஆதிகாவியமாகிய வால்மீகத்திலிருந்து பெரும்பகுதி ஒட்டிச் செல்கிறது, மறுக்க முடியாது.

அனுமனைப் பற்றிக் கம்பன் அத்தனை பாடுகிறானே, அவை அத்தனையும் வால்மீகத்தில் இருப்பதுதான். நினைத்துப் பார்த்தால் மிக ஆச்சரியமாக இருக்கும். அவ்வளவு பழங்காலத்திலே காட்டிலே வாழ்ந்த ஒரு மாபெரும் கவிஞன், இப்படி ஒரு காப்பியத்தை அமைத்தான் என்றால், அது இறைவனுடைய அருள் பெற்றுத்தான் இருக்கமுடியும். ஆகவே, வால்மீகி இறையருள் பெற்றுப் பாடினான் என்பதிலே எந்தவித ஐயப்பாடும் இல்லை.

ஆனால், நாகரிகம் வளர வளரச் சாம்ராஜ்யங்கள் தோன்றின; சாம்ராஜ்யங்கள் மறைந்தன. அந்த மாதிரி நிலையிலே வருகின்ற கவிச்சக்கரவர்த்தி தன்னுடைய காலத்திற்கேற்ற முறையிலே தன்னுடைய சமுதாயம் பயன்படக்கூடிய முறையிலே பல கருத்துக்களை இதிலே புகுத்தி- சில பகுதிகளை மாற்றி- சில பகுதிகளைக் குறைத்துப் பாடுகிறான். இது முழு இலக்கியக் காப்பிய மாகும். அந்த முறையில் இது ஈடு இணையற்றதாக அமைந்துவிட்டது என்பதிலே ஐயப்பாடு இல்லை. வால்மீகியினுடைய இராமகாதை பரவியிருந்தது என்பதிலும் ஐயப்பாடு இல்லை. ஆனால், கிழக்காசியா முதலான நாடுகளிலே சென்று பரவிய இராம காதையிலே கம்பனுடைய தாக்கம் மிகமிக அதிகமாக இருக்கிறது. அது ஏன்? வளர்ச்சி அடைந்த நிலையிலே அந்த இராம காதைகள் தோன்றுகின்றன. அந்த மாதிரி இடங்களிலே முழுவளர்ச்சி பெற்ற கம்பனுடைய காப்பியம் பெரும் தாக்கத்தை ஏற்படுத்தியிருக்கும் என்பதிலே எந்தவிதமான ஐயப்பாடும் இல்லை.

இன்றைக்கு அதைக் கதை என்ற அளவில்மட்டும் ஏற்றுக்கொள்ளாமல் காப்பியத்தை எப்படிக் கொண்டு செலுத்துகிறான். இந்தச் சமுதாயம் 9 ஆம் நூற்றாண்டிலே இருந்த நிலை, அதற்கு முன்னால் இருந்த நிலை, அல்லது பின்னாலே வளரப்போகிற நிலை, வளர்ந்தால் அதிகாரம் கைக்கு வந்தால் என்ன செய்யவேண்டும் என்பது அனைத்தையும் பார்க்கலாம். நினைத்துக்கூட உங்களாலே பார்க்க முடியாது. அறன் நிரம்பிய அருளுடை அருந்தவர்க்கேனும்

**பெறல் அருந்திருப் பெற்றபின் சிந்தனை பிறிது ஆம்**

இது கம்பனுடைய வாக்கு.

பவர் கரப்ட்ஸ்-அப்ஸல்யூட் பவர் கரப்ட்ஸ் அப்ஸலூட்லி (Power corrupts. Absolute power corrupts absolutely) இது வாக்கு. இதைக் கூறியவர் 19 ஆம் நூற்றாண்டில் வாழ்ந்தவர். இவ்வளவு அனுபவம் பெற்றவர் சொல்கிறார் பவர் கரப்ட்ஸ் என்று.

இதைப் போகிற போக்கில் சொல்லிப் போகிறான் கவிச்சக்கரவர்த்தி. அவன் காலத்திலே அவ்வளவு பெரிய சாம்ராஜ்யம் இல்லை. பல்லவர்கள் வீழ்ச்சி அடைந்து விட்டார்கள். சோழர்கள் வரவில்லை. அப்படி இருக்கையில் எப்படிப் பாடினான்? வருவது நோக்குகின்ற-எதிரது நோக்குகின்ற பேராற்றல் படைத்தவனாகிய கவிஞன் இப்படி ஒரு சாம்ராஜ்யம் வருமேயானால் அதில் இந்தக் குறை வரத்தான் செய்யும் என்று எச்சரிக்கை செய்கின்ற முறையில்,

**அறன் நிரம்பிய அருளுடை அருந்தவர்க்கேனும்**

**பெறல் அருந்திருப் பெற்றபின் சிந்தனை பிறிதாம்**

ஜாக்கிரதை என்று பாடுகிறான். அதேபோலச் சுக்கிரீவனுக்கு அறவுரை பகர்கின்றான் இராமன். சாதாரணச் சொல்லில் அவனைப் போகச் சொல்லிவிட்டு அனுமனைக் கூப்பிட்டுச் சொல்கிறான். அந்தப் பாட்டுக்குத் தற்குறிப்பேற்றம் மாதிரி பொருள் எழுதுகிறார்கள்.

நிரம்பினான் ஒருவன் காத்த நிறை அரசு’ என்று

சொல்லுவான். ஒரு நாட்டை ஒருவன் நிறை அரசு காத்தான். இப்பொழுது இன்னொருத்தன் அந்த நாட்டை வலியப் பெற்றுக்கொண்டான். அந்நாட்டு ஜனங்கள் போன ஆட்சியோடு, இந்த ஆட்சியை compare செய் வார்கள்.

வாலி ஆட்சி எப்படிப்பட்டது என்பதற்கு இராமன் நிறையரசு' என்று 'சர்டிபிகேட் தருகிறான்.

அதை வலியப் பற்றிக்கொண்டான் அவன் தம்பி சுக்கிரீ வன். மக்கள் அந்த ஆட்சியோடு இந்த ஆட்சியை ஒப்பு நோக்குவார்கள். நலனும் தீங்கும் வாலி காலத்தில் இப்படி நடக்குமா என்று நினைப்பார்கள்.

**நிரம்பினான் ஒருவன் காத்த நிறை அரசு இறுதி நின்ற**

**வரம்பு இலாததனை மற்று ஓர் தலைமகன் வலிதின் கொண்டால்**

**அரும்புவ நலனும் தீங்கும் ஆகலின் ஐய நின்போல்**

**பெரும் பொறை அறிவினோரால் நிலையினைப் பெறுவது அம்மா**

'அதற்கேற்றபடி நீதான் நடத்த வேண்டுமென்று யாரிடத்திலே இந்த அறிவுரையைச் சொல்கிறான் இராமன்? அனுமனிடம் சொல்கிறான். இங்கேதான் கவிச் சக்கரவர்த்தி ஈடு இணையற்று விளங்குகிறான். இதை இராமன் சுக்கிரீ வனிடத்தில் சொல்லியிருக்க வேண்டும். சொன்னால் பிரயோஜனம் இல்லை அவன். மாபெரும் அறிஞனாகிய அனுமனிடத்திலே - "நீதான் அமைச்சனாக இருந்து guide பண்ண வேண்டும். ஜாக்கிரதை, நிறை அரசு போய்விட்டது. இப்படி வலிதில் பற்றிய உங்களுடைய சுக்கிரீ வன் ஆட்சி வந்திருக்கிறது. மக்கள் ஒப்பிடுவார்கள். ஆகவே, நீ இந்த அரசை ஜாக்ரதையாகக் கொண்டுசெலுத்து" என்று சொல்கிறார் என்றால், இது அனுமனுக்குச் சொல்லியதா?

இந்த உலகத்திலே எத்தனை சாம்ராஜ்யங்கள் தோன்றுகின்றனவோ அத்தனை சாம்ராஜ்யங்களுக்கும் பொது அது. இப்படி உலகம் முழுவதையும்- உலகம் யாவையும் என்று

தொடங்கினானே - அதை மனத்தில் வைத்துக் கொண்டே உலகம் முழுவதற்கும் நீதி புகட்டுகின்ற முறையிலே கவிஞன் தன் காப்பியத்தை அமைக்கிறான். கதையாகப் பார்த்தால் கதையை அனுபவிக்கலாம். கதையை விட்டுவிட்டு, சிறு பாத்திரங்களாக - சிறுசிறு பாத்திரங்கள் நடந்து கொள்ளுகின்ற முறையிலே பார்ப்பீர்களானால்- எப்படி நடந்துகொள்ள வேண்டு மென்பதை அவன் தனக்கே உரியமுறையில் எடுத்துச் சொல்வான்.

இன்னும் சொல்லப் போனால் clairvoyant என்று சொல்வார்கள். வருங்காலத்தையும் அறிந்தவன் கவிஞன். என்று. இந்த 1995 அல்ல- 2996லே கூட- நீங்கள் எவ்வளவு தான் மக்களாட்சி என்று சொல்லப்படுகிற ஒட்டுப் போட்டுத் தேர்ந்தெடுக்கும் ஆட்சி வந்தாலும்கூடக் கம்பன் சொல்லிய சட்டம் என்றைக்கும் செல்லும்.

**அறன் நிரம்பிய அருளுடை அருந்தவர்க்கேனும்**

**பெறல் அருந்திருப் பெற்றபின் சிந்தனை பிறிதுஆம்**

இன்றைக்கும் அனுபவித்துக்கொண்டேயிருக்கிறோம். ஆகவே, கம்பன் என்றைக்கும் பொய்யாவதே இல்லை.

அறன் இருந்தாலொழிய வெற்றி பெற முடியாது என்பதை ஒட்டுப் போடுகிற காலத்திலேகூட உணர்ந்து கொண்டுதான் இருக்கிறோம். ஆகவே, உலகம் முழுவதற்கும்- என்றைக்கும் பொதுவாக- வள்ளுவப் பேராசான் எப்படி ஒரு பொதுநூல் இயற்றினாரோ அது போல இந்தக் காப்பியத்திலே உங்களுக்குப் பிடித்தால் இராமனையும், இலட்சுமணனையும் வைத்துக் கொள்ளுங்கள். பிடிக்கவில்லை என்றால் விட்டு விடுங்கள். அதைப் பற்றிக் கவலையே இல்லை. அவன் சொல்லிய கருத்துக்களை யெல்லாம் தொகுத்துக் கம்பன் கண்ட அரசியல் என்று சொல்வீர்களேயானால்-மாடர்ன் க்வாலிடி (modern quality) என்று சொல்லுவார்களே-அதற்கு இந்த நூற்றாண்டு மட்டுமல்ல வருகின்ற நூற்றாண்டும் வணக்கம் செலுத்துகின்ற முறையிலே அரசியல் அமைப்பை அமைத்துவிடுகிறான்.

இதை யெல்லாம் நினைந்து பார்க்கும்போது நம் முடைய

மூதாதையாகிய கம்பன் நமக்குமட்டும் இந்த நூலை இயற்றித் தரவில்லை. மனித சமுதாயம் அனைத்திற்கும் எந்தக் காலத்திலும் அவர்கள் வாழும்போது எத்தகைய வளர்ந்த நாகரிகத்தை அடைந்தாலும், சிந்திக்க வேண்டிய சூழ்நிலையில் அப்போது இராமகாதையை எடுத்துப் படிப்பார்களேயானால் அது அவர்களுக்கு உதவும். கதை பழையதாக இருக்கலாம். ஆனால் அன்றாடம் அவர்கள் பிரச்சினையைத் தீர்ப்பதற்குரிய பல அடிப்படைச் சூழ்நிலைகள் அங்கே விளக்கப் பட்டிருக்கின்றன என்பதை நினைக்கும்போது, வள்ளுவனுடைய குறளைப் போல இதுவும் உலகம் முழு வதற்கும் பொதுவான அறநூல் என்பதை உணரலாம்.

காப்பியம் என்று சொல்வதைவிட அறநூல் என்றே தெளிவாகச் சொல்ல முடியும் என்னால், அப்படிப்பட்ட அறநூலை ஆக்கித் தந்தான் கம்பன். அந்த அறநூலிலே அன்பர்கள் பல்வேறு விதமான வினாக்களை எழுப்புவதன் மூலம் அவர்களோடு சேர்ந்து நாம் அனைவரும் சிந்திக்கின்ற ஒரு வாய்ப்பைத் தந்தார்கள்.

**(28.10.1995- கோவை வானொலி நிகழ்ச்சியில் சுவைஞர்கள் எழுப்பிய வினாக்களும், அவற்றுக்கு அ.ச.ஞா. தந்த விடைகளும்.)**

# 2. திறனாய்வு : கருத்துப் பரிமாற்றம்

**25. அய்யா, இலக்கியத் திறனாய்வு என்ற ஒரு வகைமைக்கு நீங்கள் எவ்வாறு வந்து சேர்ந்தீர்கள்? தமிழ் இலக்கியம் படித்துத் தமிழ் இலக்கியத்தைக் குறித்து உங்களுடைய கருத்துக்களைச் சொல்லவேண்டும் என்று நீங்கள் விரும்பினீர்களா, இல்லை, தமிழ் இலக்கியத்தைப் படித்து விட்டு ஆங்கிலத் திறனாய்வு முறை படித்தபோது இவை இரண்டையும் பொருத்திப் பார்க்க வேண்டும் என்ற எண்ண மேலிட்டால் இந்த இலக்கியத் திறனாய்வுக்கு வந்தீர்களா?**

இந்த இரண்டுமே இல்லை. படித்தது விஞ்ஞானம், அப்புறம் கடைசி ஒன்றரை வருடம் தமிழ்ப் பச்சையப்பன் கல்லூரியிலே பேராசிரியர் பணிக்கு வந்தபோது ஒரு சிக்கல் ஏற்பட்டது. 1940-லே பி.ஓ.எல் (ஹானர்ஸ்) வைத்த போது லிட்டரெரி கிரிட்டிசிஸம் என்ற ஒரு 'சப்ஜெக்ட்' புகுத்தியிருந்தார்கள். அந்த மாதிரி ஒரு சொல்லை அதுவரையிலே தமிழ் உலகத்திலே கேள்விப்பட்டது இல்லை. ‘லிட்டரெரி கிரிட்டிசிஸம் என்ற சப்ஜெக்ட் வந்த உடனேயே அதை யார் எடுக்கிறது என்று பார்த்தவுடனே துறைத் தலைவர் கந்தசாமி முதலியார் 'நீங்க எடுத்து நடத்துங்க' என்று சொல்லிவிட்டார். அதற்கு முன்னால் 'விமர்சனம்' என்ற சொல் பரவலாக இருந்ததே தவிர, தமிழ் இலக்கியத் திறனாய்வு என்று அப்போது இல்லை. அதைப் பற்றி ஒரு 'பேப்பரே' 'கம்ப்ளீட்டா' IV Hons, V Hons இரண்டிலுமே இருக்குங்கிற காரணத்தினாலேயே அது என்னிடத்திலே கொடுக்கப்பட்டது. அது கொடுக்கப்பட்ட காரணத்தினால், அது சம்பந்தமான ஆங்கில நூல்களைப் படிக்க ஆரம்பித்தேன். மிகத் தீவிரமாக முயற்சி பண்ணினேன். இது பண்ணுகிற காலத்திலே தமிழில எப்படி அதைப் பொருத்துவது என்பது பெரிய சிக்கல். முதல் வருடம் ஏறத்தாழ ஆங்கிலத்திலே இருந்ததை அப்படியே தமிழில் சொல்லிக் கொண்டிருந்தேன். அது எனக்கே பிடிக்கவில்லை. நாளாக, நாளாக அவங்க சொல்ற

திறனாய்வு முறைகளையும் அந்தத் தலைப்புகளையும் அதிலே சொல்லப்பட்ட பொருட்களையும் அப்படியே தமிழ் இலக்கியத்தில் ஏற்றுக் கொள்ள முடியாது. ஆங்கிலத்தில் Universal என்றுதான் சொன்னார்கள். இருந்தாலும் அது சரியில்லை என்ற ஒரு எண்ணம் தோன்றிற்று. ஆனால், அதைப்பற்றி 'டிஸ்கஸ் பண்ணுவதற்கு ஆளே கிடையாது. அப்போது அதைப் படித்துக் கொண்டே இருந்தவன் நான் ஒருத்தன் தான். அப்போது கி.வா. ஜகந்நாதன் என்னுடைய பழைய நண்பர். இது மாதிரி புதுசா ஒன்று பண்ணுகிறீர்களே, இதை எழுத ஆரம்பீங்க அப்படின்னு சொன்னார்.

கலைமகளில்தான் இலக்கியக் கலை பற்றி எழுத ஆரம்பிச்சேன் 1943-1944ல். 1947-1948ல் அதற்கு ஒரு முழு வடிவம் கொடுத்து நூலாகக் கொண்டு வர முடிந்தது. ஆகவே, திறனாய்வுக்குப் போகவேண்டும்னு போக வில்லை. திறனாய்வு என்னைத் தேடி வந்தது. அப்போது ‘லிட்டரெரி கிரிட்டிசிஸம் என்பதை இலக்கிய விமர்சனம் என்று சொல்லிக் கொண்டு இருந்தார்கள். அது எனக்கு என்னவோபோல இருந்தது. அப்ப முதன் முதல்ல திறனாய்வு என்ற சொல்லைப் புதுசா உண்டாக்கி கலை மகளில் எழுதினேன். அப்போது பலத்த எதிர்ப்புக்கள். ஆனந்தவிகடனில் ஒரு குட்டித் தலையங்கமே எழுதினார்கள். திறனாம்! ஆய்வாம்!! அருமையான விமர்சனம் என்ற வார்த்தை இருக்கின்றபோது ஏன் இந்த அச. இப்போது புதிதாக ஒரு வார்த்தையை உண்டாக்கி நம்ம பிராணனை வாங்குகிறார் என்று எழுதினாங்க. அப்புறம் 10 வருஷம் கழித்து வாசன் என்கிட்ட வரும் பொழுது அவர்கள் பத்திரிகையிலேயே திறனாய்வு என்று எழுத ஆரம்பிச்சுட்டாங்க. என்னை வாசன் அப்படிக் கலாட்டா பண்ணினார். இப்ப விமர்சனம்ன்னு எழுதுனா ஆனந்த விகடனைக் கொளுத்திப்புடுவான், ஆகவே திறனாய்வுன்னு எடுத்துக்கிட்டோம் என்றார். அப்படி ஒரு ஆக்ஸிடெண்டலா வந்ததே தவிர நான் அதைத் தேடிப் போனேன் என்று சொல்வது முறையல்ல.

**26. அப்புறம், அய்யா, இலக்கணத் திறனாய்வு, இலக்கண விமர்சனம், தமிழிலே மரபா இருக்கக்கூடிய உரை எழுதுவது- இவை மூன்றுக்கும் என்ன வித்தியாசம்,**

**என்ன ஒருமைப்பாடு? நீங்க என்ன பார்த்தீங்க?**

இப்போது உரை என்று சொல்வது commentary என்பதைத்தான். வேறே. எந்த உலக இலக்கியத்திலேயும் இந்த மாதிரி கிடையாது. இப்போது எந்த நூலை எடுத்துக் கொண்டாலும் அதற்கு விளக்க உரை- கமண்ட்ரி எழுதுவது இந்த நாட்டிலேதான். ஹோமர் எழுதினாலும் 'கமண்ட்ரி கிடையாது. டாண்டே எழுதினாலும் 'கமண்ட்ரி கிடையாது. திறனாய்வாளர்கள் சில பகுதிகளை எடுத்து வைத்துக் கொண்டு இது எந்த வகையிலே சிறந்திருக்கிறது, காப்பிய கட்டுக் கோப்புகளுக்கு எப்படிப் பொருத்தமாக இருக்கிறது. என்று சொன்னார்களே தவிர, வரிசையாகப் பாடல்களை எடுத்து வைத்துக் கொண்டு அதற்கு விளக்க உரை எழுதி வருவது என்பது தமிழ் மரபில்தான் உண்டு. வடமொழி யிலே உண்டு. இல்லையென்று சொல்லுவதற்கு இல்லை. இப்ப இந்த விளக்க உரை என்று வருவதை எதில் கொண்டுபோய் அடக்குவது என்ற ஒரு பிரச்சினை எழுந்தது எனக்கு. அப்போது திறனாய்வு முறையிலே அப்பிரிசியேட்டிவ் கிரிடிசிஸம்' (appreciative criticism)—gy ஒன்னு உண்டு. இதெல்லாம் தொடக்கக் காலம். 45கள் வாக்குல அப்பிரிசியேடிவ் கிரிடிசிஸம்-னு இருக்கிற பகுதிகளிலே சிறந்த பகுதிகளை எடுத்து வைத்துக் கொண்டு, அதைப் புகழ்ந்து அல்ல அது எப்படிச் சிறப்பு பெற்றிருக்கிறது என்று எழுதுவது. அதுதான் அவர்கள் மேல்நாட்டில் சொன்னது. அந்த அப்பிரிசியேடிவ் கிரிடிசிஸம்-ங்கிறது ஒருவகையில் நமக்கு மிகவும் பொருத்தமாக இருந்தது. ஏனென்றால், இந்த விளக்க உரை எழுதினவர்கள் யாருமே குறைபாட்டைக் கண்டதே கிடையாது. குறைபாடு இருக்கிறது. இல்லையென்று சொல்லவில்லை. ஆனால், சொல்றதே கிடையாது. அதை மரபாகவே வைத்து விட்டார்கள். அது ஏறத்தாழ நச்சினார்க்கினியர் காலம். பேராசிரியர் காலம் அது எல்லாமே அப்படியே இருந்திருக்கிறது. இனி 12ஆம் நூற்றாண்டுக்கு அப்புறம் இந்த நிலைமை மாறிவிட்டது. ஒரு அளவிற்குத் திருக்குறள்தான் இதற்கு முதன் முதலில் ஒர் உதாரணம். மணக்குடவர் முதலானவர்கள் எழுதின உரையைப் பரிமேலழகர் முதலானவர்கள் மறுக்க வேண்டிய சூழ்நிலை உருவாயிற்று. அப்படி மறுக்கின்ற காலத்திலே மிகவும்

கௌரவமான முறையிலே மறுத்தார்கள். மறுத்து, புதிய விளக்கம் சொன்னார்கள். அதே மாதிரி இப்போது பேராசிரியர், நச்சினார்க்கினியர், இளம்பூரணர், இவங்களோட உரையை யெல்லாம் யாரும் இது மாதிரி செய்யவில்லை. ஆனால், இளம்பூரணர் உரையை, நச்சினார்க்கினியர் மறுத்திருக்கிறார் தொல்காப்பியத்தில். அப்படி மறுக்கின்ற போதுகூட மிகக் கௌரவமான முறையிலேதான், இதை இப்படித்தான் கொள்ளவேண்டும் என்று சொன்னார்களே தவிர, வேறு ஒன்றும் இல்லை. மிச்சம் வருகிற எல்லாமே அப்படியே 'அப்பிரிசியேடிவ் கிரிடிசிஸம்’னு சொல்லுகின்ற முறையிலே போற்றுமுறைத் திறனாய்வாத்தான் பண்ணியிருக்கிறார்கள் இல்லையென்று சொல்வதற்கு இல்லை.

**27. உரைகளிலே இலக்கணம் சார்ந்த சில குறிப்புகள் வருது. இப்ப மேலைநாடுகளிலே அந்த மாதிரி இலக்கணக் குறிப்புகள்...?**

கிடையாது. காரணம்- ஒன்றைப் புரிந்து கொள்ள வேண்டும். இந்தத் தமிழ்மொழியைப் பொறுத்தமட்டிலே ஒரு தனிச்சிறப்பு. தொல்காப்பியன், எல்லாச் சொல்லும் பொருள் குறித்தனவே என்று சொன்னான். அற்புதமான ஒரு விளக்கம். பொருள் குறித்தன என்றால் It implies that அவ்வளவுதான். It symbolises that என்று சொல்லுகிறோமே! அதுபோல. அதற்குமேல் அந்தச் சொல்லுக்குப் பொருள் கிடையாது. பொருளாகப் பெரியவர்கள் வைத்தார்கள். அதனால் பொருள் குறித்தன என்ற சொல் இதைத்தான் குறிக்கும் என்று பெரியோர்களெல்லாம் முடிவு என்று ஒத்துக்கிட்டார்கள்.

**28. அனுமானம்னு சொல்லலாங்களா?**

அல்ல. அனுமானம் என்று சொல்லமுடியாது. ஏதோ ஒரு காரணத்தினாலே முதலில் பெயரிட்டார்கள். அப்புறம் நன்னூல்காரர் காலத்திலேதான் அந்த வேறு பாட்டைப் பிரித்தார்கள். தொல்காப்பியன் காணாத வேறுபாடு. இடுகுறிப் பெயர், காரணப்பெயர் என்று இரண்டாகப் பிரித்தது. இந்தப் பெயர்கள் காரணத்தைப் பற்றி வந்தது காரணமில்லாம வந்தது என்று பிரித்தது. மரம் என்றால்

அது இடுகுறிப் பொதுப் பெயர். பனை மரங்கிறது அந்த மரத்துல ஒரு பிராஞ்ச், ஒரு தொகுதி. இடுகுறிச் சிறப்புப் பெயர். காரணம் கருதியபோது அது ஒரு குறிப்பிட்ட ஒன்றினையும், காரணம் கருதாதபோது அது எல்லாவற்றையும் குறிக்கும். முக்கண்ணன் என்றார்கள். சிவபெருமானுக்கு முக்கண் உள்ளது. விநாயகருக்கும் முக்கண் உள்ளது. முக்கண்ணன் என்று சொன்னால், அது சிவபெருமானைத்தான் குறிக்கும்- காரணம் கருதாதபோது. காரணம் கருதி முக்கண்ணுடை விநாயகர் என்று சொன்னால் அப்பொழுது அவரைக் குறிக்கும். அதேபோல் வேறுபாடுகள் வளர வளர மொழி வளர்ச்சி ஒரு காலத்திலே ஒரு பொருள் குறித்த ஒரு சொல் பல பொருள் குறித்த ஒரு சொல் ஆக மாறிற்று என்று தொல்காப்பியன் ஒத்துக்கொள்கிறான். அவன் காலத்திலேயே தமிழ் ஒரு highly developed language. ஆகையினாலே, ஒரே சொல் பல பொருளைக் குறிப்பதும் பல சொல் ஒரு பொருளைக் குறிப்பதும் வந்துவிட்டது. அப்படியானால் இதை வைச்சிக்கிட்டுக் கவிஞன் என்ன பண்ணினான்? இப்ப Mathew Arnold comes to our aid. Best word in the best order என்று சொன்னான். சிறந்த சொல்லை எடுத்து அமைக்க அந்தக் கவிதைக்கு... எல்லாருமே கவிதை பாடுகிறான். ஏதோ தனக்குத் தெரிந்ததைச் சொல்லப்போறான். ஆனால், அதற்குச் சிறந்த சொல்லைப் பொறுக்கிச் சிறந்த முறையிலே அடுக்குகிறான். Juxtaposition-னு சொல்லுகிறோமில்லையா, அதுதான். அதனாலே தமிழ்க் கவிதைக்கு ஒரு சிறப்பு ஏற்பட்டுள்ளது. பேராசிரியர் அ. ச. ஞாவின் பதில்கள் 45

**29.தொல்காப்பியத்திலேயே எல்லாச் சொல்லும் பொருள் குறித்தனவே என்று சொல்லப்படுகிறது என்று சொல்லு கிறார்களே, அய்யா.**

ஆமாம்.

**30. இலக்குவனார் வந்து வெறும் அர்த்தமானதாப் புரிஞ்சுக் கிடனும்னுங்கிற மாதிரி எழுதியிருக்கிறாரே, அதாவது ஆங்கிலத்திலே மொழிபெயர்க்கும் பொழுது, பொருள்-meaning அப்படி என்று எழுதியிருக்காரு. அப்படி என்றால் meaning-னு எடுத்துக்கிறதா அல்லது significance-**

**னு எடுத்துக்கிறதா?**

பொருள் என்று சொல்ல முடியாது.

**31.குறித்தல்...**

குறித்தல் என்று சொல்ல முடியாது. Signifies என்று கொள்ளலாம். இந்தச் சொல்லைச் சொன்னவுடனேயே அந்தப் பொருள் படிப்பவன் மனசுக்குள்ள படவேண்டும். அவ்வளவுதான்.

**32.அய்யா, அடுத்தது. மேற்கத்திய இலக்கியத்தின் திறனாய்வு அளவுகோல் என்ன? தமிழைப் பிரத்யேகமாகப் புதிதாகப் புரிந்துகொள்ள உங்களுக்கு அது எவ்வாறு உதவியது?**

அது வந்து... பேருதவி பண்ணியது. இல்லை என்று சொல்வதற்கு இல்லை. அதற்கு முன்னால தனிப் பாடலோ, காப்பியமோ அல்லது தொடர்நிலைச் செய்யுளோ, நாம் பார்க்கிற பார்வை வேறாக இருக்க வேண்டும். அதுவரையில் அந்தப் பொருளைத்தான் பார்த்துக்கிட்டு இருக்கணும். இப்ப, தொடர்நிலைச் செய்யுள் கம்பராமாயணம் போல- பதினாயிரக்கணக்காக இதில் வந்த பாடல்களைக்கூடக் கதைத் தொடர்பு, சொல்லமைதி, கற்பனை வளம், இயற்கை என்பதைத்தான் பார்த்தோமே தவிர, இத்தனையும் சேர்ந்து கம்பன் என்கிற கட்டுக் கோப்பு இருக்கிறது அல்லவா? அதை யாரும் கவனிக்கவில்லை; அதைப்பற்றிக் கவலைப்படவில்லை. அந்த Structure இருக்கிறது அல்லவா? காப்பியத்தினுடைய வடிவமைப்பு. அதை முதன் முதல்ல orchitectonics என்கிற ஹெட்டிங்ல பண்ணியவர் வ.வெ.சு. அய்யர். அவருக்குக் கிரேக்க லிட்டரேச்சரைப் படித்துவிட்டு ஹோமரையெல்லாம் படிச்ச காரணத்தினாலே, கம்பனுடைய காப்பியக் கட்டுக்கோப்பு எப்படியெல்லாம் நெளிவு சுளிவுகளோடு இருக்கிறது என்று எழுதினவர் அவர்தான். அதற்கப்புறம், பலர் அந்த வழியில் போக ஆரம்பித்துவிட்டார்கள். எனக்கும் அந்த மேலை நாட்டுக் கிரிட்டிசிஸத்தில் இப்படி முழுசாக வைச்சுப் பார்க்க முடிந்தது. ஆர்கிட்டானிக்ஸ் அல்லது ஸ்ட்ரக்சர். துண்டு துண்டா எடுத்துப் பார்க்கிறது, ஒரு பாத்திரம். அந்தப் பாத்திரத்தினுடைய ஒரு சொல் அல்லது ஒரு செயல். இந்த ஒரு சொல்லையோ அல்லது ஒரு செயலையோ எப்படிக்

கவிஞன் விளக்குகிறான் அல்லது சொல்கிறான் என்பதை நோக்குவது மற்றொன்று. இதுமாதிரி வரும் பொழுது முழுவதை மறந்துவிடுகிறோம். நீல மாலை'ங்கிற ஒரு கேரக்டர் என்று எடுத்துக்கிட்டீங் கன்னா, அதில உள்ளதே ஒன்றரை வரிப்பாட்டுத் தான். அது ஒன்றரை வரிப்பாட்டிலே சொல்ல வேண்டியதற்கு ஒரு முழு வடிவம் கொடுத்துவிடுகிறான். அவ்வளவுதான். அதான் காப்பியப் புலவனுடைய ஒரு சிறப்பு. ஒன்றரை வரியில் வருகிற ஒரு கேரக்டரை, மைனர் கேரக்டர் என தள்ளுவதே இல்லை. A minor character retains the form of a full character. அதுதான் கம்பனுடைய தனித்தன்மை. ஒன்றரை வரிப்பாட்டில் வந்துவிட்டுப் போகிறவர்களுக்கும் அந்த ஒரு மரியாதை இருக்கும்; அது ஒரு முழு வடிவாக இருக்கும். இங்கே யாரும் கவனிக்கவில்லை. இங்கே மேலை நாட்டுத் திறனாய்வைப் படிச்சதினாலே எனக்கு அந்தப் பார்வை அப்படிப் போயிற்று.

**33. குறிப்பாக, epic poetry-ல நீங்க ரொம்ப ஆழமாப்** போயிருக்கீங்க.

ஆமாம். Epic poetryதான். மற்ற poetry என்றால் ஒவ்வொரு துண்டு துண்டாக இருக்கும். ஒரு பகுதியைத்தான் பார்க்கிறார்கள். ஒரு கவிஞனுடைய முழு விஸ்தீரணத்தையும், ஆழத்தையும் அவனுடைய "ஸ்வீப்பையும் பார்க்க வேண்டுமென்றால் அவனுடைய காப்பியம்தான் லாயக்கு. இப்ப இந்தக் கருத்தோட பார்க்கும்போதுதான் கம்பனுடைய படைப்பு, சேக்கிழாருடைய படைப்பு: திருத்தக்க தேவருடைய படைப்புக்களை புதுக் கண்ணோட்டத்தோடு பார்க்க முடிந்தது. இப்படி இந்த வடிவத்தை அதுக்கு முன்னால் தனி மரமாகப் பார்த்துக்கிட்டே இருந்தோம்.

**34. சங்க இலக்கியத்தைப்பற்றி எவ்வாறு, எப்படி நினைக்** கிறீர்கள்?

சங்க இலக்கியத்தைப் பற்றி, இப்போது ஒரு குறிப்பிட்ட துறை, திணை எடுத்துக் கொள்கிறோம். அகம் இருக்கிறது அதில் 5 திணை இருக்கிறது. தனித்தனி poem ஆக எடுத்துப்பார்த்தீர்கள் என்றால், ஒன்று குறிஞ்சி, முல்லை, மருதம்னு அதற்குள்ள முதல் கரு உரி இருக்கிறதா என்று

பார்த்து, அவ்வளவுதான் என்று விட்டுட்டோம். அந்தக் கவிதை என்ன சொல்கிறது என்பதைக் காணவேண்டும். நச்சினார்க்கினியர் கூட "இந்தக் காரணத்தினாலே இதைச் சொல்லியிருக்கிறதனாலே, அது இந்தத் திணையாயிற்று, இந்த விளக்கத்தை சொல்லியிருக்கிறது. இந்த இயற்கை வர்ணனை இருக்கிறது" என்று சொன்னானே தவிர, அந்தக் கவிதையை முழுவதுமா வைத்து என்ன கூறிற்று என்று சொல்லவில்லை. இந்தக் குறை நச்சினார்க்கினியர்கிட்ட ஆரம்பிக்கவில்லை. வியாக்யான கர்த்தாக்கள் கிட்ட ஆரம்பித்துவிட்டது. சொன்னால் சண்டைக்கு வருவார்கள். அற்புதமான அறிவாளிகள். மறுக்க முடியாது. ஆனால், ஒரு கவிதையினுடைய ஒரு அடியை எடுத்து அந்தச் சொல்லைப் பிரிச்சு எத்தனை எத்தனை விதமா அதற்குப் பொருள் காணமுடியும் என்று அதற்குப் போய் விட்டார்கள். அது அறிவுக்கு விருந்து, கவிதை அறிவுக்கு மட்டும் விருந்தல்ல, கவிதையினுடைய உயிர்நாடி உணர்வு.

**உயர்வற உயர்நலம் உடையவன் எவன் அவன்**
**மயர்வற மதிநலம் அருளினன் எவன் அவன்**
**அயர்வறும் அமரர்கள் அதிபதி எவன் அவன்**
**துயாறு சுடர்அடி தொழுதெழுஎன் மனனே"**

இந்தக் கவிதையை நம்மாழ்வார் பாடும்போது என்ன 'பாவத்தை கொண்டு வருகிறார். நம்மை அறியாமல் அப்படியே உயர்வற உயர்நலம் உடையவன் என்ற வுடனேயே, அதற்கு நான் எழுதியிருக்கிறேன். மில்டனுடைய பாரடைஸ் லாஸ்ட்டுக்கு ஒரு திறனாய்வு எழுதும்பொழுது சொன்னேன். அதில் சாத்தானுடைய முடி அசைந்தது. அதிலிருந்து இறக்கை, கோழி இறகு கீழே விழுகிறதாம். அதை "and fell, and fell, and fell and fell என்று 4 fell போட்டு ஒரு லைன். இதற்கு நான் விளக்கம் எழுதினேன். என்ன பெற வைக்கிறான் கவிஞன்! அப்படியே அதில் ஈடுபட்டிருக்கிறான்! சாத்தானை அண்ணாந்து பார்த்துக்கிட்டு. அவன் தலை ஆட்டம் கண்டு போனவுடனே அந்த முடி கீழே விழுந்து, அது விழ விழ நம்மை அறியாமல் கீழே பார்க்கிறோம். அந்தப் பார்வை மேலேயிருந்து கீழே வருகிறது. நமக்கு அதைப் பெற வைத்துவிட்டான், and tell and

fell என்று சொல்லும்போது. விழுந்தது நாம நினைக்கல; நம்ம கண்ணுல ஏதோ விழுந்துகிட்டு இருக்கிறது என்று நாம் பார்த்துக்கொண்டு இருக்கிறோம். இந்த மாதிரி, உயர்வற உயர்நலம் உடையவன் எவன்- அந்த உயர் என்றால் என்ன? அற என்றால் என்ன என்று விளக்கம் எழுதவில்லை. இந்தப் பாட்டு முழுவதும் என்ன ஒரு உணர்ச்சியை உண்டு பண்ணுகிறது என்கிற விளக்கத்தை விளக்கமாக எழுதுகிறார்கள். நச்சினார்க்கினியர், பேராசிரியர் என்ன சொன்னாங்க சொல்லை எடுத்து, சொல்லைப் பிரித்துச் சொல்லுக்குப் பொருள். அந்தச் சொல் அடைவு இருக்கிறதே, கற்பனை வளத்தை எப்படிக் கொண்டு வருவது என்று பார்த்தார்களே தவிர, தோப்பை அனுபவிக்க மறந்தார்கள். தனி மரத்தை அற்புதமாக விளக்கிவிடுவார்கள், மறுக்க முடியாது. இந்த மரமெல்லாம் கூடிய தோப்பு இருக்கிறதே. அதைப் பார்க்கவில்லை. அது தமிழில் ஒரு குறைதான். அதை முதன்முதலில் அந்தப் பார்வையைப் பார்க்கணும்னு சொன்னவர் வ.வெ.சு. அய்யர்தான். அதற்கு அப்புறம் of course நிறைய பேர் இதைச் செய்திருக்கிறார்கள். எனக்கு இந்த ஆங்கிலப் பார்வை வந்தவுடன் நான் முதல்ல இராவணன் மாட்சியும் வீழ்ச்சியும் எழுதும்போது வ.வெ.சு. அய்யரைப் படிக்காமல்தான் எழுதினேன். படிக்கக் கூடாதுன்னு நினைத்தேன். என் மனத்திலே ஒரு பாடம் பண்ணிட்டேன். இராவணன் anti hero என்பதைக் கம்பன் எப்படி டெவலப் பண்ணியிருக்கான் என்பதை எழுதியிருக்கிறேன். 'இராவணன் வீழ்ச்சி என்று ஒரு சேப்டர் எழுதியிருக்கேன். இறப்பது எல்லோருக்கும் சகஜம். எத்தனையோ பேர் மாண்டனர் அதில் இவன் ஒருத்தன். அதில் என்ன வந்திருக்கு பெரிய பெருமை இவனுக்கு! not because of death – செத்ததற்காகக் கவலைப் படல, அதோட எத்தனை நற்பண்புகள் கீழே விழுந்தன. இந்த ஒருத்தன் வீழ்வதில்- நற்பண்புகள், ஒரு நூறு இருக்குது. நூறும் சேர்ந்து வீழ்ந்தன. அதுதான் tragedy ராஜா செத்தான் என்றால் nobody bother அவன் மனைவி பிள்ளைகளுக்குத்தான் கவலை. ஆனால் ஒரு மகாத்மா காந்தி செத்தார் என்றால் உலகம் முழுவ்தும் அழுகின்றது. ஏனென்றால் so much of ஒரு பண்பு, அந்தப் பண்பு கீழே வீழ்ந்தது. பண்பு இல்லாத எனக்கு அதைப்

பற்றிக் கவலை கிடையாது. அதுதான் ட்ராஜடி.

இதைப் பண்ணனும்னு நினைச்சவுடனே வ.வெ.சு. அய்யரைப் பார்க்கணும்' என்று சா. கணேசன் சொன்னார். நான் பார்க்க மாட்டேன்னு சொன்னேன். ஏன் என்று கேட்டார்.

He may mislead me. அது ஆதியிலே என் தகப்பனார் என்னை உரை படிக்காம பழக்கினாரே அந்த அந்த மாதிரிப் பழக்கம்.

I will have my own view; அப்புறம் படிச்சுக்கிடலாம்.

**35. நீங்க சொன்ன மாதிரி ஒரு மனிதன் விழும்போது, அந்த அவலம்-கிறது...?**

அந்தச் சொல்லை, அவலம்-கிற சொல்லை நான் தான் உருவாக்கினேன். Tragedy என்ற சொல்லுக்கு அவலம் என்று போட்டது நான்தான்.

**36. அப்ப மொத்தமா எல்லாத்தையும் சேர்த்துச் சொல்றீங்களா?**

எல்லாம் சேர்த்தல்ல. அவனுடைய நற்பண்புகள்.

**37. நீங்க சிலப்பதிகாரத்தைப் பத்தியும் எழுதியிருக்கிங்க. சிலப்பதிகாரத்திலே கோவலனுடைய விழ்ச்சி வந்து tragedy-னு எழுதியிருக்கீங்க.**

ஆமாம்.

**38. Tragedy-னு எப்படி சொல்றீங்க.**

அதுல காட்டியிருக்கேனே. "கடக்களிறு அடக்கிய கருணை மறவ!
ஒல்காச் செல்வத்து உறுபொருள் கொடுத்து
நல்வழிப் படுத்த செல்லாச் செல்வ
பற்றிய கிளைஞரிற் பசிப்பிணி அறுத்துப்
பல்லாண்டு புரந்த இல்லோர் செம்மல்!
இம்மைச் செய்தன யானறி நல்வினை"
போதாதா?

**39. அத்தனை பண்புகளும் இருந்ததுன்னு சொல்றீங்க?**

ஆமாம், வழியில போகின்ற-பார்ப்பான் சொல்றான்.

**40. ஒஹோ!...**

மாடலமறையோன் சொன்னது, ஆகையினாலே, அவனுடைய வீழ்ச்சியிலே tragedy இருந்தது.

**41. இப்போ... சிலப்பதிகாரத்திலே அந்த அரசன் வீழ்றா னில்லையா?**

ஆமாம்.

**42. அரசனுடைய வீழ்ச்சியை நீங்க அவலம்னு கருதுறிங்களா, அல்லது என்ன...?**

அரசனுடைய வீழ்ச்சியை அப்படிப் பெரிசு படுத்தத் தேவையில்லை. ஏன் என்றால்...

**43. அநீதியின் வீழ்ச்சினு சொல்றீங்களா?**

இல்லை, இல்லை, அரசனைப் பற்றி இவர் ஒன்னும் சொல்லலையே, அவனுடைய பண்புகள், நற்பண்புகள் ஏதாவது ஒன்றைப் பற்றி சொல்லியிருந்தார் என்றால் வீழ்ச்சி என்று நினைக்கலாம். ஒரு இடைத்தரகர் மாதிரி வருகிறான். அவன் செத்ததுனால, என்ன, எவனோ ஒருத்தன் செத்தது மாதிரி அவனும் செத்தான். அதனால அது பற்றி ஒன்றுமில்லை.

**44. கடைசியிலே, கண்ணகி தனியாக ஆகிவிடுகிறாளே,** மதுரையை எரித்துவிட்டு.

ஆமாம்.

**45. கண்ணகியுடைய தனி நிலையை நீங்க சாலிலக்கி"னு** சொல்லுவீங்களா?

இல்லை, இல்லை. அது பைத்தியக்காரத்தனம். கம்யூனிகேஷன்' intended communicationதான் சாலிலக்கி' இங்கே அதுவே கிடையாது. தன்னுடைய உணர்ச்சியிலே, மனம் போனதைப் பேசிக்கிட்டுப் போகிறாள் அவள். அந்த உணர்ச்சியை அடக்குகிறாள், புது நம்பிக்கை வருகிறது. மலையிலே ஏறி நிற்கும்போது. ஒரு முலை இழந்த திருமா பத்தினி நீ யார்னு கேட்கிறார்கள், அந்தக் குறவர்கள். அப்போது மதுரையோடு அரசு கேடுற வந்த தீவினையேன் நான் என்று சொல்கிறாள் அவள். அது எந்த 'சாலிலக்கி' implied communication என்பதற்கு எதிரில் ஆள் இல்லாமல் இருக்கவேண்டும். அப்போது தான் 'சாலி லக்கி என்று பெயர்... that is implied communication. No communication here. அவள் தனக்குத் தானே பேசிக் கொள்கிறாள். கம்யூனிகேஷன்

வரும் பொழுது எதிரில் குறவர்கள் நிற்கின்றார்கள். ஆகவே, அதில் சாலிலக்கி கிடையாது. மதுரையோடு, அரசு கேடுற வந்த தீவினையேன் நான் என்று சொல்லும்போது, there are people standing there சாலிலக்கி பெரும்பாலும் எங்கே வருகின்றது என்றால், அகப்பாடல்களில் வரும். தலைவியைப் பற்றி நினைத்துத் தன்னுடைய மனத்திற்குச் சொல்கிறான். அவள் காத்துக் கிடப்பாள்.

செந்தார் பைங்கிளி முன்கை ஏந்தி

இன்று வரல் உரைமோ சென்றிசினோர் திறத்து'

என்று கிளியிடம் பேசி வேதனைப் படுவாளே என்று தலைவன் பேசுகிறான். அவ கையில கிளி வைத்து இருக்கிறாளோ, கையில சிறங்கு வந்துருச்சுன்னோ தெரியாது. செந்தார் பைங்கிளி முன் கையேந்தி இன்று 'வரல் உரையோ சென்றிசினோர் திறத்தென' - சொல்லுவாள் என்று அவள்கிட்டப் போக விரைந்து செல்லும் நெஞ்சே என்று சொல்றானே அது 'சாலிலக்கி. அதைக்கூட avoid பண்ணிவிடுகிறார்கள். பெரும்பாலும் தோழனுடன் சொல்லியது போல்தான் இருக்கும். அப்படியும் இல்லாமல் சில பாடல்கள் இருக்கின்றன. அவை ரியல் - சாலிலக்கி" 54 பேராசிரியர் அ. ச. ஞாவின் பதில்கள்

**46. இப்போது உதாரணத்திற்கு, இந்தக் காப்பியம், சிலப்பதிகாரம், கம்பராமாயணம், இந்த மாதிரி இடங்களிலே, அதாவது ஒரு குறிப்பிட்ட பாத்திரம் சொல்ல முடியாததாகச் சிலவற்றைச் சொல்லிவிட்டு, அதாவது incommunicable. அதாவது மொழியில் சொல்ல முடியாததைச் சொல்ல முயற்சி பண்ணியிருக்கிறானு சொல்லலாமா?**

Communicable என்பதற்கு இந்தப் பொருள் இல்லையே.

**47. அடுத்தது- புதிதாக இப்ப நீங்க செய்துகிட்டுவந்த இலக்கிய விமர்சனம், இலக்கியக் கோட்பாடுகளை 'அப்ளை பண்ணி நிறையத் தமிழ் இலக்கியத்திலே நிறையப் புதிய விசயத்தை நீங்க சொன்னிங்க. இப்பப் புதியதாக ரீடர்ஸ் ரெஸ்பான்ஸ் தியரி-னு ஒன்று வந்திருக்குங்க. உங்களுக்கும் தெரியுங்க.**

ஆமாம்.

**48. அதாவது, ஒரு குறிப்பிட்ட படைப்பை ஒருவன் எழுதும் பொழுது அவன் மொழி வழியாகத் தன்னுடைய படைப்பை ஆற்றுகிறான். அந்தப் படைப்பை எழுதி முடித்தவுடன் அவன் அந்தப் படைப்பிலிருந்து விலகிக் கொள்கிறான், ஆசிரியன் என்பவன். அதன் பிறகு அந்தப் படைப்பை வாசகன் படிக்கும்பொழுது அந்த வாசகர்கள் வந்து அந்த மொழிவழியான அந்தப் படைப்பைப் படைத்தாருனு ஒரு புதிய அர்த்தத்தைச் சொல்றான். அதாவது ஆசிரியர் நினைக்காத அர்த்தம்...**

அதைப் பண்ணியிருக்கிறோம். எது வழியாக வருகிறது என்று தெரியாது.

**49. அது பற்றி உங்களுடைய கருத்தைச் சொல்லுங்களேன்.**

மணவாளனும் நானும் இதைச் சேர்ந்து பேசியிருக்கிறோம். அதிலே, ஒன்றை மறந்துவிடாதீர்கள் வெஸ்டர்ன் கிரிடிசிஸம் முழுவதும் based on novels and short stories; 'பொயட்ரி ரொம்பக் குறைவு. ஷேக்ஸ்பியர் மாதிரியோ, மில்டன் மாதிரியோ, பொயட்ரி ஒண்ணும் கிடையாது. பிற்காலத்திலே, போப்தான் ட்ரை பண்ணினான். அது மிஸ்ரபிள் பெய்ல்யூர் (miserable failure). ஆகவே, பெரும்பாலும் அவர்களுடைய கிரிடிசிஸம் எல்லாம் நாவல்ஸ், ஷார்ட் ஸ்டோரிகளை பேஸ் பண்ணி வந்தது. அதை அப்படியே 'அப்ளை பண்ண ஆரம்பித்தால் வம்பில மாட்டிக்கிடுவீங்க. இங்கே நமது கவிதைக்குத்தான் பேசுகிறோம். அந்தக் கவிதை has a form of its own. அதனுடைய தொழிலும் வேறே, கடமைகளும் வேறே, உத்திகளும் வேறே. ஆகவே incommunicable. அதாவது சொல்ல முடியாததைப் பாரதி சொன்னானே கேட்கா வரத்தைக் கேட்கத் துணிந்தேன் என்று அதுமாதிரி சொல்ல முடியாததை சொல்றது என்பதுதான். சில உணர்ச்சிகளுக்குச் சொல்லினால் வடிவம் கொடுக்க முடியாது. நம்முடைய இலக்கியத்திலே ஓர் அற்புதமான இடம் இருக்கிறது. சிலப்பதிகாரத்திலே கோவலன் இறந்துவிட்டான் என்பதைச் சொல்ல வருகிறாள் ஒரு தோழி. அவளோ- கடைவீதிக்குப் போனவ. சொல்லாடாள் சொல்லாடாள் நின்றாள் அந்நங்கைக்குச் சொல்லாடும் சொல்லாடும்தான் சொல்லாள் . அந்

நங்கைக்கு. இதை ட்ரை பண்ணியிருக்கிறார் இளங்கோ. பேச விரும்பல, பேசாமலும் இருக்க முடியல-சொல்லாடாள் நங்கைக்குச் சொல்லாடும் சொல்லாடும் தான். அரையும் குறையுமா கொலைபுரிந்தனரே என்று உளறுகிறாள். கொண்ணுட்டாங்கிறதை அவள் சொல்லவில்லை; கொலை புரிந்தனரே என்று சொல்ல வருகிறாள். அதைக்கூட எப்படிச் சொல்வது என்று சொல்லமுடியமால் மென்னு முழுங்கிக்கிட்டுச் சொல்கிறாள். அப்படிச் சொல்றதை incommunicable-னு சொல்றது பொருத்தம்.

**50. நம்மாழ்வார் வந்து. அவன், இவன். உவன் என்று சொல்றாரே... அது எப்படி..?**

அது தத்துவ விளக்கம். அவன், இவன், உவன் இருக்கே-அதற்குப் பின்னால, நம்மாழ்வார், உளந்தனில் உளனவன் என்கிறார். இவை அவனுடைய உருவங்கள். உளந்தனில் உளனவன் இவ்வுருவுகள் அவை. ஆகையினாலே இது ஒரு மாபெரும் தத்துவம். அதை அவர் அழகாக எளிமையாகச் சாதாரண நம் மாதிரி ஆட்களுக்கும் விளக்கம் சொல்றதுதான் அந்த அவன் இவன் உவன் பாட்டும். உளந்தனில் உள்ளவன்-பாட்டும். இவ்வளவு பெரிய கருத்தை அழகான பொயட்ரியில் வைத்தார்களே அதுதான் திறமை.

**51. மொழி உடையிற மாதிரி அந்த விஷயத்தை அவர் பொயட்ரியில சொல்லும்பொழுது, ரெகுலரா வருகிற பொயட்ரி ஸ்ட்ரக்சர்-ல் இருந்து அந்த இடம் வரும் பொழுது- அவன், இவன், உவன் என்று வரும்பொழுது ஏதோ ஒரு இடத்திலே உடையிற மாதிரி இல்ல...?**

அதாவது பின்ன முன்ன வந்த வரிகளிடத்தில், - முன்னே சிலப்பதிகாரத்திலே சொன்னேனே! - அது மாதிரி, சாவக நோன்பிகள், அது மாதிரி தனியா நின்றது என்றால் நீங்க சொல்வது சரி. இந்த அவன், இவன் உவன் அடிகள் எல்லாம் முன்னும் பின்னும் எதுகை மோனையோடு இருக்கும். ஆகவே அதை நீங்கள் உடையாது என்று சொல்ல முடியாது. அது தேவாரங்களுக்கும், பிரபந்தங்களுக்கும் உள்ள ஒரு தனிச் சிறப்பு. என்னவென்றால் என்ன ராகம் இருக்கிறது என்று தெரியவில்லை, இதுன்னு சொல்றான்; அதுன்னு

சொல்றான். நான் தமிழிசைச் சங்கத்திலே சொன்னேன், "சிரமப் படாதே! எந்த ஒரு ராகத்திலே பாடும்பொழுது சொல் உடையாம வருதோ, அதுதான் அதற்குரியது" என்று. எந்த ஒரு ராகத்திலே பாடும்பொழுதும் சொல் உடையாம வரணும். சந்தமார், அகிலொடு சாதிதேக் கம்மரம் - காதிலே கம்மரம்னு பாடுவான். இது மாதிரி வரக்கூடாது. வகையுளி-னு சொல்கிறோமா இல்லையா, அது மாதிரி பிரியாமல் வரவேண்டும். அந்தப் பெரியவர்கள் பாடிய பாட்டெல்லாம், எந்தக் காரணத்தைக் கொண்டும் சொல் உடையாது. அதுக்கு ஏற்றபடி ராகம் அமைந்திருக்கும். விருத்தப்பாவாக இருக்கட்டும். அது எதுவாக இருக்கட்டும் கவலையில்லை. சந்தப்பாடல் உட்பட அதுதான் criterion, அந்த criterion வேறு எந்த மொழியிலேயும் பார்க்க முடியாது.
சமஸ்கிருதத்துலகூட அந்த மாதிரி பிரேக் உண்டு. அவர்கள் அந்த மாதிரி கருதுவதும் இல்லை; அதைக் குறை என்றும் கருதுவது இல்லை. இவன் அதை ஒரு குறையாகத்தான் கருதி யிருக்கிறான். எவனோ ஒருத்தன் பாடிவிட்டான். அதற்கு ஒரு இலக்கணம் கண்டு பிடித்தானே தவிர, வகையுளி கூடுமானவரை வரக் கூடாது. அதுதான் அந்தப் போக்கு தேன் ஒழுகுவது போலப் போய்க்கொண்டிருக்கிற நடை

**52. அகம் புறம் என்ற வகைமைகள் உள்ளதெல்லாம் தமிழிலே. இலக்கியத்திலே வந்து- இப்ப மேல்நாட்டிலே சில இலக்கியத் திறனாய்வுகள், கோட்பாடுகள் வரும் பொழுது அவர்களுடைய பழைய tradition ஆக இருந்து கொண்டு வந்ததை வளர்க்கிறார்கள். உதாரணத்திற்குத் தமிழிலே அகம் புறம் என்ற வகைப்பாடு, ரொம்ப காலமாகவே தமிழ் இலக்கியத்திலே இருந்து வந்திருக்கிறது. அது நாயக-நாயகி பாவத்திலே கூட இருக்கும். அகப்பாடல்கள் மாதிரி, சமயப் பாடல்கள்கூட அகப் பாடல்கள் போன்ற தன்மைகளோடு வந்துருக்குங்க. அகம் புறம் என்ற இருகோட்பாடுகளை வைத்து தமிழுக்கு பிரத்யேகமா ஒரு திறனாய்வு முறை அல்லது விமர்சன முறை உருவாக்க முடியுமா?**

சம்மதம். பண்ணலாம். ஆனால், அது செத்துப் போய் விட்டது. அது 12ஆம் நூற்றாண்டோட போய்விட்டது.

அதற்கு அப்புறம் யாரும் பண்ணவில்லை. தொடர்ந்து வந்திருக்குமேயானால் அது நீங்கள் சொல்கிற ஆராய்ச்சிக்குப் பொருத்தமாக இருக்கும். இப்போது சங்க கால இலக்கியத்திற்குமட்டும் வைத்து ஒரு தியரி ஆப் லிட்டரேச்சர் பண்னனும்.

**53. விமர்சனம்-கிறது தியரி ஆப் லிட்டரேச்சர் - என்று சொல்லலாமா? -**

திறனாய்வு வேறே, தியரி ஆப் லிட்ரேச்சர் வேற.

**54. அகம்-புறம் கோட்பாடு...?**

இந்த மாதிரி வருகிறதும், 'கிரிட்டிசிஸத்துல' ஒரு பகுதி. திறனாய்வுல ஒரு பகுதிதான் அது. ஆனால் அது ஏன் செய்யவில்லை என்றால், அது என்றைக்கோ போயிடுச்சு, இப்ப அதை யார் இழுத்துப்போட்டுச் செய்து கொண்டிருப்பார்கள்? அதை இப்ப மாணவர்களுக்கு எளிதாகச் சொல்லித் தரவேண்டும். அதுக்கு மேலே வாத்தியாருக்கும் தெரியாது. அப்புறம் சொல்லிக் கொடுக்க நமக்குக் கஷ்டம். இந்த மாதிரி broad structure அகம்-புறம் குறித்து. இதிலேயிருந்து இலக்கியம் வாழ்வு முறையோடு தொடர்ந்து இருக்கிறது என்று ஒரு பெரிய ஆராய்ச்சி. அதை யாரும் செய்யவில்லை. இனி இதைச் செய்வது தேவை என்று எனக்கும் தோன்றவில்லை. இனி இந்த அகம் வந்து பக்தி இயக்கத்துலகூடப் புகுந்துக்கிறதுனு சொல்கிறார்கள். ரொம்பப் பேரு இந்தத் தவற்றைப் பண்ணிக்கிட்டு இருக்கிறார்கள். அதைப் பக்தி இயக்கம் என்று பாரதிதாசன் யுனிவர்சிட்டியில் பேசியிருக்கேன். அதை அப்படியே வைச்சுட்டேன். இன்னும் அச்சுக்குக் கொண்டுவரவில்லை. ஒவ்வொரு தடவையும் எடுக்கும் போது idea வருவதால் சரின்னு வைச்சிடரேன். இந்த ஒன்றை ரொம்ப சிந்திச்சு வைச்சிருக்கேன். எப்படி வந்தது. இந்த அகப்பாடல் பக்தி இயக்கத்திலே? பாடுவது மூன்று வயதுப் பையன். மூன்று வயதுப் பையன் உள்ளம் கவர் கள்வன்-னு பாடினால் அது வந்து juvenile delinquency என்று அர்த்தம்

**55. திருஞானசம்பந்தர் மாதிரி...**

ஆக, என்ன கருத்து. அகத்துக்கு என்ன அர்த்தம் பண்ணுனாங்கன்னு இருக்கு. அப்ப அகத்துக்கு என்ன அர்த்தம் கண்டுபுடிச்சாங்கன்னு தெரியல. இப்ப அகம்னு

சொன்னா, புருஷன் பொண்டாட்டி-ங்கிற அர்த்தத்துக்கு வந்துட்டோம். அது இல்லை. வள்ளுவன் எச்சரிக்கை பண்ணிட்டான். கடைசியாக வந்தவன் அவன்,

சங்க இலக்கியத்திற்குப் பின்னால் 'மலரினும் மெல்லிது காமம் என்று கூறினான். It is a mental status. அவன்தான் சொன்னான். காமம் என்பது சங்க காலத்திலே

இருக்கு. காமம் காமம் என்ப; காமம்

அணங்கும் பிணியும் அன்றே, நுணங்கிக்

கடுத்தலும் தணிதலும் இன்றே; யானை

குளகு மென்று ஆள்மதம் போலப்

பாணியும் உடைத்து அது காணுநர்ப் பெறினே

என்று சங்க இலக்கியத்திலே சொல்லியிருக்கான். It is a mental Status-னு வந்தவுடனே ஆண்-பெண்ணுங்கிறதே கிடையாது. ஆகவே, காதலனுடைய முதல்படி என்ன? அதைத் திருநாவுக்கரசர் விஸ்தாரமாப் பாடினார். 'முன்னம் அவனுடைய நாமம் கேட்டாள், தன்னை மறந்தாள், தன் நாமம் கெட்டாள் இது தான் காதலினுடைய கடைசிநிலை. தான் என்பது அறவே அழிந்துபோவது. அறவே அழிஞ்சு போவதுதான் காதல் என்றால், அது இறைவனிடத்திலே தன்னை ஈடுபடுத்தி மறந்தாலும் காதலியிடத்திலே ஈடுபட்டுத் தன்னை மறந்தாலும் சரி, இது இரண்டும் ஒன்றுதானே! ஆகவேதான் இவர்கள் அப்படிப் பாடினார்கள். இந்த வெள்ளைக் காரங்களுக்கு அது புரியாததால், அவன் என்ன பண்ணிட்டான்? இதை லவ் பொயட்ரினு சொல்லி அது ரொம்பக் கேவலம் என்று சொல்லிவிட்டனர். திருவாசகத்திலும்கூட அம்பாளைப் பற்றி வந்த வரிகளை, போப் ட்ரான்ஸ்லேஷன் பண்ணினதுல அதை அப்படியே பிளாங்க்கா விட்டுவிடுவாரு ஆமாம் அது அவர்களுக்குத் தெரியாது. அதை எடுத்துச் சொல்லத் தமிழாசிரியர்களுக்குத் தெரியவில்லை. அதனால வந்த வினை அது. உண்மையான காதல் என்பது ஒரு மனநிலை. தான் என்பதை அறவே மறந்து மற்றொரு பொருளிடத்து ஈடுபடுவது உண்மையான காதல். அதைச் சங்க இலக்கியத்திலேயே பாணியும் உடைத்து அது காணுநர்ப் பெறினே என்று சொல்லப்பட்டது. ஒருத்தன்கிட்டதான் அந்த மனநிலை ஏற்படும். அது ஏற்படும்போது என்ன மனநிலை

இருந்ததோ அதுதான் காமம். காமம், காமம் என்பர். அது அணங்குமன்று, பிணியுமன்று. இந்தப் பாட்டு இருக்குது. இன்னொரு பாட்டும் இருக்குது. அது:

காமம் காமம் என்ப காமம்

அணங்கும் பிணியும் அன்றே நினைப்பின்

முதுசுவற் கலித்தமுற்றா இளம்புல்

மூதா தைவந் தாங்கு

விருந்தே காமம் பெருந்தோ ளோயே

**56. ஆண்டாள் பாட்டிலே தலைவி தலைவனுக்காக ஏங்குகிற தன்மை இருக்கின்றதல்லவா..?**

**57. அது ஒரளவுக்கு அகத்துறையிலே சம்பந்தப்பட்டதா இருக்கலாமல்லவா?**

ஒரளவுக்கு அல்ல. முழுவதும், அகத்துறைதான். புருஷோத்தமன் என்ற ஒரு ஆண்தான் உண்டு. அவன் இறைவன். மற்ற எல்லா உயிர்களும் பெண்கள். ஆகையினாலே அது வந்து அகத்துறைப் பாடல்கள் என்பதில் தப்பு இல்லை.

**58. சமீபத்திலே ஆண்டாளைப் பற்றி ஆய்வு, தமிழவன் பண்ணியிருக்கிறாரு அமைப்பியல், பின்னமைப்பியல் (Post Structuralism) சொல்லியிருக்காங்க. அதுல இரண்டு வகைகள் வருது. உதாரணத்திற்கு பாக்டின் என்ற ஒருவருடைய தியரியை வைத்து அணுகுகிறாரு. நான், நீ, அப்படி என்பதை "I and You இந்த இரண்டு விஷயம் வருது. அது ஒண்ணிலே வந்து ஒரு பகுதி உடலாகவும், ஒரு பகுதி உதிரியாகவும் வருது. உடல் பாடல் என்ற இரண்டு வகை வருது. புரியல.**

**59. உடல், பாடல் அப்படீன்னு வருது. உடல் என்பதை physical உடலாகவும் பாடல் என்பதை physical உடம்பி லிருந்து வரும் ஆன்மா- மாதிரி மொழியிலே வந்து அதை narrate பண்ணுகிற மாதிரி வருது. அதுக்குக்கூட இந்த மாதிரி நான்- நீ என்கிற தன்மை சங்க காலத்து இலக்கியத்திலே இருந்தே I and You என்பது வருதுன்னு எழுதியிருக்காங்க. நான் இதை ஒரு rough ஆக சொல்லுகிறேன். அதுவும் முழுக்க அகத்துறைப் பாடல் என்று சொன்னனீங்க. அதுக்கு இன்னும் கொஞ்சம்**

**விளக்கம் வேண்டும்.**

அதாவது, இப்ப ஆண்டாள் 1 and You சொல்றாரே, ஒரு பெரிய பிரச்சினை இருக்கிறது. சங்க இலக்கியத்திலே சொல்லுவார்கள். ஓர் உடல் ஈருயிர் என்று. ஏனய்யா ஒரு உடலுக்கு இரண்டு உயிர்? எத்தனையோ பேர் சேர்ந்தாலும் இதற்குப் பதில் சொல்ல முடியாது.

மாணிக்க வாசகர் சொல்கிறார். அந்தப் பதிலை இந்தக் காலத்திலே படிக்கிறவர்கள் அதையெல்லாம் படிக்கிறது கிடையாது. முன்னால படிச்சவர்கள் அதைக் கேள்வி கேட்டா நரகத்துக்குப் போவேன்னு சொல்லிட்டாங்க. அப்போது அவனை இந்தக் கேள்வி ஒரு இது பண்ணிடுச்சி..... ஓருயிர் இருக்கும்போது ஈருடல் எதுக்காக- அப்படியென்று ஒரு கேள்வி கேட்டா இப்போது அமிழ்தம்-னு ஒன்று இருக்கு. சுவைக்குப் பேர் போனது. எல்லோரும் அமிழ்தத்தைச் சாப்பிட்டுவிட்டு நல்லாயிருக்குன்னு சொன்னாங்க. ஆனா, அந்த அமிழ் தத்துக்குத் தன்னைத் தான் சாப்பிட்டுக் கொள்ள முடியாது. புரியாது. very difficult. ஜாக்கிரதையாக follow பண்ணனும். அமிழ்தம் தன்னை உண்டவர்கள் அனைவரும் சுவை - சுவை-னு சொன்னாங்க. அந்த அமிழ்தத்துக்கு ஒரு யோசனை வந்தது. . சுவை என்றால் என்ன? அதை நான் அனுபவித்தாகணும்னு நினைச்சது. அமிழ்தம் என்பது ஒரு பொருள். உணவு ஆகிய பருப்பொருளும் இருக்குது. அதுல, சுவை என்பது குணானுபவம். அந்தச் சுவையை உடைய குணி அமிழ்து. இப்ப அந்தக் குணத்தை எல்லாரும் அனுபவிக்கிறார்கள். அந்தச் சுவையை உடைய அந்தக் குனி இருக்கிறதே. அது தன்னுடைய சுவையைத் தான் அறிய முடியாது.

**60. அது உள்ளேயிருந்துதான் அனுபவிக்க முடியும்.**

இப்போது இரண்டு இருந்தாத்தான் அனுபவம். ஒன்னு இருந்தா அது அனுபவம் இல்லை. இந்த அமிழ்து பார்த்தது. தன்னுடைய உருவத்தைத் தானே அனுபவிக்கப் பார்த்தது. நடக்கிற காரியமா, முடியலை. ஆகவே, ஆண்டவன்கிட்டே கேட்டதாம், அது. எல்லோரும் என்னைச் சாப்பிட்டுவிட்டுச் சுவை சுவைனு சொல்றாங்களே. நான் என்னை அனுபவிக்க வேண்டாமா என்று. அதுக்காகப் பிரித்தாக வேண்டும். சொற்பால் அமுது இவள் யான் சுவை என்னத் துணிந்து

இங்கனே. என்று திருக்கோவையார் பாடுகிறார். சுவையையும் சுவைபடும் பொருளையும் பிரிக்க முடியாதே. இப்ப எப்படிப் பிரிஞ்சு இருக்கிறே. அது அமிழ்து, நீ சுவை-னு சொல்றியே எப்படினா நற்பால் வினைத் தெய்வம் நான் இவள் என்று பகுதி செய்தது'. தன்னுடைய சுவையை அறிவதற்காக அமிழ்து சுவை என்று பிரித்ததைப் போல ஒர் உயிர் நாங்க இரண்டு பேரும். இப்ப நாங்க ஒருவரை யொருவர் அனுபவிக்கனும்கிறதுக்காக இவள் என்றும் நான் என்றும் பிரிந்தோம் என்று அற்புதமாக எழுதியிருக்கிறார். உலகத்திலேயே இதற்கு ஈடு கிடையாது. திருக்கோவையார் பாட்டு சொற்பால் அமுது இவள் யான் சுவை என்னத் துணிந்திங்ஙனே நற்பால் வினைத் தெய்வம் தந்தின்று' இங்கு... It is only a temporary state நாங்க மறுபடியும் ஒன்றாகத்தான் இருக்கப் போகிறோம். ஒருவரையொருவர் அனுவிக்க வேண்டும் என்பதற்காகத் தெய்வம் எங்களைப் பிரித்தது. இதுதான் அகத் துறையினுடைய basic concept.

**61. இரண்டும் இருக்கிறதால்தான் சுவைக்கிறங்க... அப்படித்** தானே?

ஆமாம். அதற்காகப் புருஷோத்தமன் தன்னுள்ளே இருக்கிறவன். பிரபந்தத்துலகூடச் சொல்லுவாங்க, எண் பொருளாகவும், பஞ்சபூதங்களாகவும், நானாகவும் உடலாகவும், உயிராகவும், எல்லாமாகவும் இருக்கிறான். அவன் எப்படி அனுபவிக்கிறான்!

**62. பெரியாழ்வார் சொல்கிறாரே, பெருமாளைப் பார்த்துப் பாடும்பொழுது, அரங்கனைப் பார்த்துப் பாடும்பொழுது... பெரியாழ்வாரும், ஒரு ஆண், திருமாலும் ஒரு ஆண். ஆனால், அவங்க இரண்டு பேருக்கும் இடையிலே அவரு பாட்டுப் படிப்பது புரியலையே?**

நாம். ஆண்-பெண் என்றால் ஃபிசிகல் பாடியை வைத்தே அர்த்தம் பண்ணிட்டு வந்துட்டோம். Physical body never came into play. அங்க ஆண்னு பிரிக்கின்ற பிரச்சினையே கிடையாது. இதில் எல்லா உயிர்களும் பெண்கள். இறைவன் ஒருத்தன்தான் ஆண்.

**63. பிறகு ஏன் இப்படி ஆண் விகுதியிலே எழுதி** யிருக்காங்க?

சொல்வதற்கு ஒரு வழி. தத்துவ ரீதியாக எல்லா

உயிர்களும் ஒன்று. பிராக்டிகலா...

**64. So, அவன்-கிறது அங்கே அவள்தான்.** அவனுக்கும்-அவளுக்கும் வேறுபாடு கிடையாது. இவன் ஆம்பளையா இருந்தாலும், எப்படி இருந்தாலும் இவன் பெண்தான். இந்த ஆன்மாக்களுக்கு ஒரே ஒரு புருஷன்தான் உண்டு. அதனால்தான் புருஷோத்தமன் என்று சொன்னோம். ஆகவே, அவனை அனுபவிப்பதற்கு ஆணுக்கும் உரிமையுண்டு. பெண்ணுக்கும் உரிமை உண்டு.

வாயுந் திரைஉகளும் கானல் மடநாராய்

ஆயும் அமருலகும் துஞ்சிலும்நீ துஞ்சாயால்

நோயும் பயலைமையும் மீதுர் எம்மேபோல்

நீயும் திருமாலால் நெஞ்சம்கோட் பட்டாயோ!

இது பராங்குச நாயகியாகிய நம்மாழ்வார் பாடியது. இங்கே ஆண் ஏது, பெண் ஏது? நம்மாழ்வாரே பெண்ணாகிப் பெருமாளிடம் தூது அனுப்புவாரு.. அடேங்கப்பா. நம்மாழ்வார் படித்தீர்களானால் பெரியாழ்வார் கூடக் கொஞ்சம் பின்னால வந்துவிடுவார்; அந்த மாதிரி ஒரு அற்புதம். இப்ப இந்த வியாக்யான கர்த்தாக்கள், பிரிச்சு பிரிச்சு பீஸ் பீஸா எடுத்தாங்களே தவிர, புதுசா அந்தப் பாட்டை வைத்துக் கொண்டு. இந்த நூல்களை அனுபவிக்கணும்னா அதனுடைய பேஸ் தெரிஞ்சிக்கிட்டு தான் அதை அனுபவிக்கணும்.

**65. உதாரணத்துக்குச் சொன்னிங்க- அமைப்பியல், பின்னமைப்பியல், இந்த மாதிரி விஷயங்களை வந்து அப்ளை பண்ணனும்னா ரொம்ப ஜாக்கிரதையாப் பண்ணனும்னு. எதை மனத்திலே வைத்துக் கொண்டு இதையெல்லாம் அப்ளை பண்ணிப் பார்க்கனும்னு சொல்றீங்க?**

அதுதான் முதல்நாளே உங்களைக் கேட்டேன்.

உங்களுக்கு இலக்கிய பேஸ் உண்டா என்று. நீங்க வேறு துறையில இருக்கீங்க. அந்த இலக்கிய பேஸ் இருந்தாத்தான் இதைப் பண்ண முடியும். ஏன் என்றால் இந்த உணர்ச்சி, இந்த அமைப்பு முறையே வேறு. It has nothing to do with even Sanskrit, ஒன்றும் பண்ணல. இந்த வளர்ச்சியே தனி. உண்மையா அதனுடைய வளர்ச்சிக்கு யாரும்

கவலைப்படவில்லை. உரை எழுதியவர்கள் அதிலேயே ஈடுபட்டாங்க. அதனால அப்ஜக்டிவ்'வா பார்க்கிற பழக்கம் போய்விட்டது. வெள்ளைக்காரனுடைய 'கிரிடிசிஸத்ததைப் படிச்சதுக்குப் பிறகுதான், அப்ஜக்டிவ்வா. பார்க்கிற எண்ணத்தை உண்டாக்கினேன்.

நான் சரவண முதலியார் மகன்தானே, தினமும் பெரிய புராணத்தைப் படிச்சவன்தான். பெரிய புராணம் ஆய்வு எழுதும்போது என்னுடைய பக்தியையெல்லாம் இங்கேயே மூட்டை கட்டி வைச்சிட்டுத்தான் நான் காஞ்சிபுரம் போவேன். (குறிப்பு:தமிழ்ப் பல்கலைக் கழகத்தின் காஞ்சிபுரம் மையத்தில் அ.சஞ7. பெரிய புராண ஆராய்ச்சி மேற்கொண்டு பெரிய புராணம் ஒர் ஆய்வு என்ற நூலை உருவாக்கினார்) அங்க சேக்கிழாரை பீஸ் பீஸா எடுத்துப் புடுவேன். அப்ப அந்த மாதிரி அப்ஜக்டிவ்வா பார்க்கிறதுங்கிற பழக்கத்தை உண்டாக்கிக் கொண்டால். நீங்கள் அனுபவிக்க முடியும்.

**66. அதுதான் அப்ஜெக்டிவ் கிரிடிசிஸம்'னு சொல்லுங்க...** அதாவது தன்னைப் பிரிச்சு எடுத்துடனும்.

**67. அப்ஜெக்டிவ் அனாலிசிஸ்.**

ஆமாம், Either you are a Catholic or a Protestant. Otherwise you are an agnostic. எதிலேயும் நம்பிக்கை இல்லாதவன். இப்ப என்ன தான் இருந்தாலும் அதைப் பிரிக்க முடியாதுங்க. அதை நான் பார்க்கிறேன். இவ்வளவு சமத்துவம் பண்ணி என்ன பண்ணினாலும் வெடுக்குன்னு உட்கார்ந்தா எனக்கு 'நமச்சிவாய'- தான் பண்ண முடியுது. நமோ நாராயணாயப் பண்ண முடியல. அது தெரியுது. இதே பவர் அதுக்கும் உண்டு என்று. மந்திரங்கள் என்றால் என்ன என்று ஒரு நூலையே எழுதியிருக்கேன். சயின்டிபிகா frequency ஐ வைச்சு இந்தச் சொற்களையெல்லாம் என்ன frequency-ல்u compile பண்ணினாங்க, எதனால் மந்திரமாச்சு- நமச்சிவாயனு சொன்ன அது சாதாரண வார்த்தைதானே. இது எப்படி மந்திரமாச்சு? அதான் charged batteries எல்லாம் வைச்சு உதாரணம் காட்டி கம்ப்ளிட்டா Physics— ஐ வைத்து எழுதியிருக்கேன். அதுலேயிருந்து எடுத்து, சயின்டிபிகா பண்ணியிருக்கிறதுனால, அதை தினமணியில பல நாட்கள் போட்டுவிட்டனர். ஆனா இவ்வளவெல்லாம் எழுதுன

எனக்கு Personalலா வரும்பொழுது நம சிவாயன்னுதான் வருது. அது ஒன்றும் பண்ண முடியாது.

**68. இப்ப உதாரணத்திற்குச் சொன்னிங்க. இந்தத் தமிழ் எழுத்துக்குரிய இலக்கியம், தமிழ்ல மரபு வழியா வருகிற டாலண்ட், மரபு கையளித்த ஒரு இல்க்கியச் செல்வமாகும். இவை அத்தனைக்கும் நீங்க இவ்வளவு ஆய்ந்து வந்துருக்கீங்க. இதுல தமிழ்க்குனு ஒரு அணுகல் முறை இருக்குன்னு நீங்க நினைக்கிறீங்களா?**

கண்டிப்பா இருக்கு.

**69. என்ன அதனுடைய பிரத்யேகத் தன்மைன்னு நினைக்** கிறீங்க?

அதாவது வாழ்க்கை முறை இயற்கையோடும், பரம் பொருளோடும் இணைத்துக்கொண்டதாக இருந்தது. அதனால்தான் task work poetry-னு தமிழ்ல கிடையாது. இயற்கையைத் தனியாக அனுபவிக்கிறதென்பது கிடையாது. இயற்கையே இறைவனுடைய வடிவம் என்று கருதினர்.

வம்பார் குன்றம் நீடுயர்சாரல் வளர்வேங்கைக்

கொம்பார் சோலைக் கோலவண்டியாழ்செய் குற்றாலம்

என்கிறார் ஞானசம்பந்தர். இது குற்றால மலையப் பத்திச் சொன்னதா உரை எழுதியிருக்காங்க இல்லை அவருக்கு மலையேதான் ஆண்டவன்.

**70. பச்சைமாமலைபோல் மேனி...**

அது உதாரணம், உவமை. இங்கு அது உவமை இல்லை. அதுவேதான். ஆக அதுக்கு ஒரு உதாரணம் சொல்லுகிறார் குருபரம்பரை ஆசிரியர். சிறீரங்கத்திலே உலோகசாரங்கர் என்று ஒரு பட்டர். ரொம்ப பக்தர். இறைவனுக்குத் தினசரி அபிஷேகம் பண்ணுகிறவர். ஒருநாள் பெருமாள் சொன்னார். அடே லோகசாரங்கா! காவிரியாற்றின் எதிர்க்கரையிலே ஒருத்தன் என்னைப் பாடிக்கிட்டு இருக்கிறான். அவனைத் தூக்கித் தோளிலே வைச்சுக்கிட்டு வா' என்று.

இதை ஒரு வைஷ்ணவ கான்பரன்ஸில் சிறீநிவாச ராகவன் தலைவர், நான் சொன்னேன், நான் சைவன், எனக்கு வைஷ்ணவ சம்பிரதாயம் தெரியாது. சொன்னதுல ஏதும் தப்பா இருந்தா, மன்னிச்சுக்குங்க. குண்டுக் கட்டை மாதிரி

நிக்கிறானே அவனை எதுக்கு தோள்ல தூக்கிக்கிட்டு வரணும்? நொண்டியா, இல்ல. அப்படி யிருந்தா வேணும்னா தோளில தூக்கிட்டு வரலாம். இருந்தாலும் தோள்ல வைச்சுட்டு வந்தார். பெருமாளே. இயம்பிய வாக்கானதால் இப்ப பெருமாள்கிட்டக் கொண்டு வந்து நிறுத்தினான். அவர் பாடினார்.

அண்டர்கோன் அணியரங்கன் என் அமுதினைக்

கண்ட கண்கள் மற்றொன்றினைக் காணாவே' - என்று

பாடினார். எம்பெருமானுடைய திருவடியைப் பார்த்தார். அது திருவடியாகத் தெரியவில்லை. அது கமலபாதமாகத் தெரியுது. தாமரையாக, இந்த தாமரையைப் பார்த்த பிறகு வேறு எதையும் பார்க்க விரும்பலே என்று பாடினார். அவர் ஹரிஜன், இந்த பட்டாச்சாரியைத் தூக்கி வைத்துக் கொண்டு வரச் சொன்னார். அது ஏன் என்று சொன்னா, 30 வருஷமாப் பூஜை பண்ணுனாரே, பெருமாளை, இவர் பெருமாளா நினைச்சாரா, அர்ச்சவதாரம்னு நினைச்சாரு சிறீமந் நாராயணனோட சிம்பல், அடையாளம்னு நினைச்சாரு. தவிர இதுதான் பெருமாள்னு நினைக்கல. திருப்பாணாழ்வாருக்குப் பெருமாள்னுதான் தெரிந்தது. இந்த சிம்பல் எல்லாம் தெரியல. ஆகவே லோகசாரங்க முனிவரைவிடக் கோடி மடங்கு மேலே போயிட்டார். அதனாலதான் தோளில் தூக்கி வைத்துக்கொண்டு வரச் சொன்னாரு என்று சொன்னேன். ராகவன் அடேய் சைவா, நாங்க வைஷ்ணவங்க எல்லாம் கும்புடறோம்னு' சொன்னார். உண்மையிலேயே அந்த அனுபவம் வந்து விட்ட பிற்பாடு, விக்ரகத்தை பார்த்த பிறகு அமுதினைக் கண்ட கண்களால் மற்றொன்றைப் பார்க்க மாட்டார்கள்! ஆக அனுபவத்தின் ரீதியில் வந்தது இலக்கியம். வாழ்க்கை யோடு ஒட்டியவை அனுபவங்கள்.

**71. Cognition பத்தி சொன்னீங்க, pastoral poetryனு தமிழ்ல ஒண்ணுமில்லை. அதாவது இயற்கையையும் மனிதரையும்...** ஒண்ணா நினைச்சாங்க. ஒண்ணாச் சேர்ந்து இயற்கையைப் பார்க்கும்போதே தன்னைத்தான் பார்க்கிறான். இறை சொரூபத்தைத்தான் பார்க்கிறான். ஆகவே தனியாச் சொல்ல வேண்டியது ஒன்றுமில்லை. இப்ப 96-பூ அடுக்கியிருக்கிறான், குறிஞ்சிப்

பாடலிலே. It is a list, alright, beyond that அதுல எதுவும் கிடையாது.

**72. இப்ப உதாரணத்திற்குச் சங்க இலக்கியத்திலே ஓர் இடம். தலைவன் தலைவிக்கு இயற்கைக் குறிப்பைப் படைச்சுத் தலைவனுக்குத் தலைவி இருக்கின்ற மனோநிலையைச் சொல்ற மாதிரி நற்றிணைப் பாடல்களில் வருகிறது.**

அதாவது, கவிஞனுடைய சாமர்த்தியம் சொல்லு கின்ற முறையிலே அதிலே உள்ளுறை இறைச்சி ஆக வந்து அதைப் படிச்சிக்கிட்டுப் போறப்ப ஒரு அர்த்தம் இருக்கும். அந்த அர்த்தத்தை விட்டுட்டுக் கீழே பார்த்தீங்கன்னா வேறு அர்த்தம் இருக்கும். இதுல இரண்டு வகை உண்டு. டோட்டலா வைத்துப் பார்ப்பது இறைச்சின்னு பேரு. முழுப்பாட்டையும்- தனியே பிரிக்கக் கூடாது- முழுப்பாட்டையும் படித்தவுடன் அதில் இருந்து ஒரு அர்த்தம் கண்டுபிடிப்பது இறைச்சி. லைன் பை லைன் பண்ணுவது அது உள்ளுறை.

உள்ளுறை என்பது - line by line

இறைச்சி என்பது- total

ஒரு பலாத்தோப்பு. அதில் வந்து ஒரு பன்றியை அடிச்சிட்டுக் கரடி இழுத்துக்கிட்டுப் போகுது. செத்துப் போன பன்றி நாறுது. பலரை ஈர்க்கும் ஒரு பாட்டு. முதலடியை மறந்துட்டேன் இது உள்ளுறை. இதுவரை இந்தப் பலா நல்லாத்தான் இருந்தது. இந்தக் கரடி வந்தது. இப்பத் தெருத்தெருவா மானம் போகப் பேசுது. பலாத் தோப்பு இதுவரையிலே வாசனை அடிச்சிக்கிட்டுக் கம கமன்னு இருந்துச்சு. இந்தப் பன்றி இழுத்துட்டுப் போறதுல, பலாத் தோப்பு நாற ஆரம்பிச்சுடுச்சு. இதுதான் உள்ளுறை இதைத் தொல்காப்பியன் இறைச்சிதானே பொருட் புறத்ததுவே என்று சொல்லுவான். இறைச்சி, உள்ளுறை. இதெல்லாம் வேறு எந்தப் பொயட்ரியிலும் பார்க்க முடியாது. ஏனென்றால் இது இயற்கையோடு இணைந்த வாழ்வு pastoral poetryஇல் அவன் தனியே நின்று அதை வர்ணிக்கிறான். இங்கே தனியே நின்று வர்ணிக்கிறது இல்லை. எந்த வர்ணனையை எடுத்துக்கிட்டாலும் கவிஞன் அதுக்குள்ள உட்கார்ந்திருப்பான். வ.வெ.சு அய்யர் கூட அந்தத் தப்புப்

பண்ணிருக்கிறாரு புரியாம எழுதியிருக்கிறாரு அய்யா, வ.வெ.சு அய்யர். சங்க இலக்கியப் பயிற்சி இல்லாததுனால. இது வந்து அவர் நினைக்கிற மாதிரி வெறும் வர்ணனைனு எழுதுறாரு வெறும் வர்ணனை அல்ல. அது வந்து இங்கிலீஷ் பொயட்ரியில தான் possible தமிழ்ல அது மாதிரி வரவே வராது.

**73. உதாரணத்திற்குச் சைவத்தைப் பற்றி விரிவாக, சைவ சமயம், சைவ இலக்கியம் அதனுடைய வழியைக் கடைப் பிடிப்பதற்கு- நீங்க ஆய்வு செய்திருக்கீங்க. அதுல சைவ மதம் அல்லது சைவ இலக்கியம் அது தமிழர்களின் ஒருவகையான அறிவுத் தொகுப்பு, எபிஸ்டமாலஜி' என்று நினைக்கிறீர்களா?**

எபிஸ்டமாலஜி என்று வார்த்தை சொல்கிறீர்கள். மறுபடியும் அவ்வாறு சொன்னீர்கள் என்றால், நான் ஒத்துக்கிற மாதிரி இல்லை. சைவ இலக்கியம் ஒரு அறிவுத் தொகுப்பு, பரம்பரையாக வந்த அறிவுத் தொகுப்பு என்று நினைக்கிறீர்களா?

அறிவுத் தொகுப்பா? அனுபவத் தொகுப்பா? வாழ்க்கைத் தொகுப்பா? இதை எது என்று சொல்றது? அறிவினாலே சிலவற்றை அறிகிறார்கள். அது தனியே இருக்கும்போது எபிஸ்டமாலஜி.

**74. சாத்திரங்களை எபிஸ்டமாலஜினு சொல்லலாமுங்களா?**

சாத்திரங்கள், நீதி நூல்கள் இவையெல்லாம் எபிஸ்டமாலஜி. இதே மாதிரி தமிழ்ல கிடையாது. எல்லா வற்றையும் கொண்டுவந்து சேர்த்துவிட்டார்கள். தமிழ்ல நீதி நூல் முதன் முதலில் ஆரம்பிச்சவன் வள்ளுவன்தான்.

ஒரு ஜெர்மன் research பண்ணிக்கிட்டு இருந்தான். கொஞ்ச நாள் அவன் என்கிட்ட guide என்கின்ற முறையில வந்துகிட்டு இருந்தான். அவன் எழுதினான். Tamilian race was so bad, nasty, rough that it required a Thiruvalluvar என்று, அத அவன் வந்து is it acceptable என்று கேட்டான்.

Definitely you better write itனு சொன்னேண். நானே அந்தக் கருத்துள்ளவன், ஒரளவிற்குத் தேவை ஏற்படும் போதுதான் ஒரு நூல் வரும். இந்த மாதிரி எழுதித்தான் அகம்-புறத்துல

அவன் குட்டிச்சுவராப் போயிட்டான்.

**75. சிவஞானபோதம் - இந்த மாதிரி...**

அது வந்தது பிற்காலத்திலே.

**76. அது வந்து எபிஸ்டமாலஜி-னு சொல்லலாமா?**

அதுதான் சொல்கிறேனே, யாரோ மொழிப்பெயர்த்துருக்காங்க. சாத்திரங்கள் தொகுப்புனு Epistomology is a very broad word - it implies the results of an intellectual pursuit; அறிவினால் ஆராய்ந்து பார்த்துக் கண்ட முடிவுகள். வாழ்க்கையினுடைய, அதாவது, வேண்டுதல் வேண்டாமை, தேவை தேவையில்லாதவற்றைச் சொல்லுவது எபிஸ்டமாலஜி. இது மாதிரி ஒன்று தமிழில் பிரிக்க முடியாது.

**77. தமிழுக்கு ஒரு எபிஸ்டமாலஜி இருக்கிறது மாதிரி...**

அதுதான் திருக்குறள் இருக்கிறதே. அது மாதிரி பதினெண்கீழ்க் கணக்குங்குற பெயரிலே கண்றாவி யெல்லாம். உட்காருவது எழுந்திருப்பது பல் துலக்குவது, (இவற்றைத் தெரிவிக்கும் நூல் ஆசாரக்கோவை, அந்நூலினையே அ.ச.ஞா. இவ்வாறு சுட்டுகிறார்) எல்லாம் கண்றாவிக் கூத்துக்கள்.

**78. அப்ப, இயற்கையோடும், மனிதனோடும் சம்பந்தப்படாத இலக்கியங்கள் இந்த மாதிரியாக முடிஞ்சு போச்சு?**

அது ஒன்றும் பயனில்லாதது. இதில் திருவள்ளுவர் தப்பித்துவிட்டான். அவன் தப்பாப் பொறந்தவன். அவன் வந்து நீண்ட நூல் சொன்னாலும், அதை இலக்கியமாகப் பண்ணிட்டான். வாழ்வோடு இணைத்துவிட்டான்.

**79. சாத்திரங்கள் இலக்கியமாகாத பட்சத்திலே அது இந்த மாதிரி உதவாமப் போய்விடுகிறது.**

உதவாமல் போயிருந்தால். (அழிந்திருக்கும்) அது intended for a group of people; அதில் யுனிவர்சல் அப்ளிகேஷன் கிடையாது. அதனால் அந்த மக்களுக்குச் செவிவாயிலாக, நெஞ்சு களனாக, அவன் சொல்வன சொல்லி, அப்படிச் சொல்வதைக் கேட்டுக்கிறான். சரி தான் போ அவ்வளவுதான்.

**80. தமிழ்ல மிக முக்கியமாக இருக்கக் கூடியது, சமஸ்கிருத எதிர்ப்பு அல்லது சமஸ்கிருதத் தொடர்பு முழுக்க இணைந்த மணிப்பிரவாளம். தமிழிலே இந்த இரண்டு போக்கு இருக்குங்க. இப்ப சமஸ்கிருதம், தமிழ் வேறு பாடான மொழிங்கிறதை மறந்துட்டு, ஒரு மொழி அல்லது கலாசாரம், இன்னொரு மொழி கலாசாரத்துடன் பரிவர்த்தனை இல்லாமல் இருக்க முடியுமுங்களா? உதாரணத்திற்கு, செவ்விந்தியர்களை எடுத்துக் கிட்டாக்க, அவுங்க எந்த ஒரு எக்ஸ்சேஞ்சுக்கும் மற்றவங்ககிட்டப் பேசல. அதனால அந்த இனமே அழிச்சிடுச்சு.**

இந்த நிலைமை நீடித்தால்தான் இந்த மாதிரி தனித்துவம் கொண்டாடலாமே தவிர, தனித்துவம் என்பது possible இல்லை. இன்னும் ஒன்று நீங்க நினைக்கிற மாதிரி தொல்காப்பியன் காலத்திலே ஏதோ தனித் தமிழ் வந்தது என்கிறது, ஏதோ படிக்காதவன் பேசற பேச்சு. அது fraud. தொல்காப்பியத்துல கலந்து இருப்பது மாதிரி வேறு எதிலேயும் கலப்படம் இல்ல.

அறுவகைப் பட்ட பார்ப்பனப் பக்கமும்

ஐவகை மரபின் அரசர் பக்கமும் .

இருமூன்று மரபின் ஏனோர் பக்கமும் -

இந்த வரிகளெல்லாம் கலப்படத்தைத் தெளிவாக்கு கின்றன. என்று கூற இடம் இருக்கிறது.

வடமொழிச் சொற்களை எடுத்துத் தமிழில் பயன் படுத்தினால், தற்பவம் தற்சமம் என்று வரையறை செய்தார்கள். எப்போது இப்படி இலக்கணம் பண்ணிட்டானோ அந்தத் தொல்காப்பியன், அவ்வளவு கலந்து போச்சுன்னு அர்த்தம். இவ்வளவு கதையெல்லாம் அடிக்க முடியாது. தனித் தமிழ் அது ஊரை ஏமாற்ற வைத்துக் கொள்ளலாம். அதுல எனக்கு ஒன்றும் அப்ஜெக்ஷன் இல்லை.

ஆனால் பெர்சனலி ஒன்று இரண்டாவது, நிறைந்த culture கொண்ட மொழி- உங்களுக்குப் பிடிக்குது பிடிக்காதது என்பது வேற விஷயம். உங்களுக்குக் காமாலை, நீரழிவு. நீங்க சக்கரை சாப்பிடக் கூடாது. கிருஷ்ணா ஸ்வீட்டுனு

ஸ்பெஷல் மைசூர் பாகு ஒன்று தயாரிக்கிறான். இந்தப் பூலோகத்துல அந்தச் சுவை மாதிரி வேறு எதிலும் கிடையாது. ஆழ்வாரே இச்சுவை தவிர என்று பாடுவது இதைச் சாப்பிட்டுத்தான் போல இருக்கு இப்ப உங்களுக்கு அதைக் கண்டாலே எரிச்சல். நான் ஆனந்தமாச் சாப்புடறேன். வெளியில போய்ச் சொல்றீங்க. 81 வயசுல இந்த மாதிரி போட்டு முழுங்குகிறது, எதில் இருந்து வருது? உங்க பொறாமையில இருந்து வருது. அதுபோல அனுபவிக்க முடியாதவன் பேசற பேச்சு. இதையும் படிக்காமல், அதையும் படிக்காமல் பெருந் தவறு பண்ணிட்டோம் நாம், வடமொழி பிடிக்காமல்.

இன்னொன்னு: வடமொழி யாது? நீங்களாகவே கற்பனை பண்ணிக்கிட்டீங்க, ஆரியன், திராவிடன் என்று சொல்வதில். ஒரு மண்ணாங்கட்டியும் இல்லை. இன்றைக்கு வடமொழியில மிகச் சிறந்ததுன்னு போற்றுகிறது சங்கரருடைய ஃபிலாசபி உண்டா இல்லையா? அப்புறம் இராமானுஜர் ஃபிலாசபி, விசிஷ்டாத்வைதம். இந்த இரண்டும் இயற்றியவன் யாரு? தமிழன்தான், தெரியுதா. இம். புத்தி இருக்குதா? அவன் பாப்பா னாவது, புடலங்காயாவது, இந்த சிறீபெரும்புதூர்ப் பார்ப்பனன் தமிழன். ஒருத்தன்- அப்ப காலடிங்கிறது மலையாளமும் இல்ல ஒரு கத்திரிக்காயும் இல்ல சங்கரன் இன்னும் அவன் காலத்துல 8ஆம் நூற்றாண்டுல மலையாளம்னு ஒன்று தனியாக இல்லை. கொடுந்தமிழ் நாடுன்னு பேரு. அப்புறம் என்ன கேடு? உங்களவன் இயற்றியதுதான் இப்போது உலகமெல்லாம் பேசுவது. பிரசித்தமா இருக்குது. ஏதோ ஒரு அரசியல் நோக்கத்திற்காகப் பிரிச்சாங்க. அன்றைக்கு அழிஞ்சோம் நாம்.

**81. பாடுதல்ல தனியா திராவிடர் இலக்கியம், திராவிடர் மொழி...**

அது உண்மை, அதை மறுக்க முடியாது. ஏன் என்றால், இது வேற மொழி இது வேற மொழி அதை மறுக்கவே முடியாது. ஆனால் இந்த இரண்டும் கலந்தது என்பது தொல்காப்பியன் காலத்திற்கு முன்னாலேயே வந்தாச்சு.

**82. சமஸ்கிருதம் கலந்ததுனால, தமிழுக்கு...**

இப்போது ஒன்ற வாங்கிட்டுப் போனிங்கஙேள, அதைப் படிச்சுப் பார்த்தாத் தெரியும். வேத காலம் என்று சொல்வது, உலகம் எல்லாம் பரவினது என்று சொல்வதெல்லாம் fraud என்று எழுதியிருக்கிறேன். வேதம் என்று நாம் குறிப்பிடுவது அந்தப் பஞ்சாப், ஹரியானவில் இருந்ததுதான். தமிழ்நாட்டில் வைதிகம் வைஷ்ணவம். கிழக்கே, சாக்தம், பௌத்தம், சமணம்- இது இப்படி வந்தது ஈஸ்ட்கோஸ்டோட, அது வெஸ்டர்ன் கோஸ்டோட வந்தது. நம்மவனுடைய ஒரு பெரிய சிறப்பு என்ன வென்றால், கதவு எப்பவும் திறந்தே வைத்திருப்பான். எவன் வேண்டுமானாலும் உள்ளே நுழையலாம். ஏமாந்தவன் என்று ஒரு காலத்திலே நான் நினைச்சேன். இன்றைக்கு அவ்வாறு இல்லை. தன் மேலே உள்ள தைரியம். இப்ப அரசியல்ல எப்படி யென்றால் நான் வந்து முட்டாள். அதிர்ஷ்டவசமாகப் பேர் வாங்கிட்டேன். பெரிய மனுஷனாயிட்டேன். நான் புரபஸராக ஆனவுடனேயே அறிவாளியை எனக்குக் கீழே எடுக்க மாட்டேன். எனக்குக் கீழ் என்னைவிட முட்டாளாகப் பார்த்து உட்கார வைத்துவிடுவேன் இன்றைக்கும் பார்க்கலாம். ஏன்னா அவன் என்னைவிட அறிவாளியா, 'பிரைட்டா இருந்தா, உலகமெல்லாம், என்னாய்யா அவன் அசிஸ்டென்டா இருக்கான்னு சொன்னா என் கதி என்னா ஆகிறது. ஆக I will choose an idiot. அப்பத்தான் நான் 'ஷைன் பண்ண முடியும். இதே கதைதான் இப்போது நடந்துகொண்டிருக்கிறது. அப்போது தமிழனுக்கு நம்பிக்கை இருந்தது. ‘என்னை ஒன்றும் பண்ணமுடியாது. என்னுடைய கல்ச்சர் அவ்வளவு ஆழமானது. எவன் வந்தால் எனக்கென்ன என்றபடி

**83. வடமொழிக்கும் தமிழுக்கும் ஏற்பட்ட பரிவர்த்தனையிலே தமிழுக்கு நன்மைதான் நடந்திருக்குனு நினைக்கிறீங்களா? இங்கே நன்மை தீமை...**

**84. இல்லை, பலம் பெற்றிருக்கு என்று நினைக்கிறீர்களா?**

அதுல சந்தேகமே இல்லை. அதுமாதிரி நம்மாளால வடமொழியும் வளர்ந்திருக்கு. அது டபிள் ரிப்லக்ஷன் தியரினு லிட்டரரி கிரிட்டிசிஸத்துல ஒன்னு உண்டு.

வான்மீகம் வந்து தமிழகத்தில பரவி தமிழகத்தில முறைப்பாடுகளைப் பெற்றுத் திருப்பி போகுது. அதாவது வால்மீகி ராமாயணத்துல ஒரு ஜாதகம் குறிக்கணும், யாருக்கு? இராமர் லஷ்மணருக்கு. இதப் படிச்சிக்கிட்டு இருந்தேன். எனக்கு ஜோசியம் தெரியும். ஒரு தப்புக் கண்டுபிடிச்சுட்டேன். அதாவது இராமன் ஆயில்யத்தில் பிறந்தான். பரதன் வந்து மகத்துல பிறந்தான். பூரத்துல இலக்குவன் பிறந்தான், உத்தரத்துல இன்னொருத்தன் பிறந்தான்- இப்படிக் கம்பன் பாடுறான். வால்மீகியில என்ன பண்ணிட்டான், இதக் காப்பியடிச்சவன் சரியா அடிக்கல. ஆயில்யம், மகத்த எடுத்துட்டு, ராமன் பிறந்தான், பரதன் பிறந்தானுட்டு, அடுத்து பூரத்துல இரண்டு பேரும் பிறந்தான். ஏன்னா, இரட்டைப் பிள்ளைன்னு பண்ணிட்டான். புரியுதா?

இதுல இருக்கிற பேசிக் தவறு என்ன என்று இவனுக்குத் தெரியாது. காப்பியடிச்சானே தவிர, பேஸ் ஒர்க்ல பண்ணிட்டான். ஆனால் ஒரே ராசியில பிறந்தான் என்றால், 14 வருஷம் ஒருத்தன் (இலக்குவன்) காட்டுல இருக்கான். இன்னொருத்தன் சத்துருக்கன் நாட்டுல இருக்கான். அது முட்டாள்தனம். ஒரே ராசியா இருந்தா ஒருத்தன் 14 வருஷம் அங்கேயும், ஒருத்தன் 14 வருஷம் இங்கேயும் இருக்க முடியாது. அவன் ராசி வேறு, இவன் ராசி வேறு. கம்பன் பாடுகிறான் ஜாக்கிரதையா. ஆக இது புரியாதபடி டிரான்ஸ்லேஷன் பண்ணி எழுதியிருக்கான். இதுதான் டபுள் ரிப்லக்ஷன் (double reflection) என்று பேரு. அங்கே இருந்து இங்க வந்து ஏதாவது மாறுதலைப் பெற்று மறுபடியும் அங்கே போகும்.

**85. உதாரணத்துக்கு அய்யா, உமறுப்புலவருடைய சீறாப் புராணத்தில் வந்து தடாகத்துல வந்து.... அது தமிழில் வந்து...**

அது திருநெல்வேலிச் சீமையை வைத்துக்கொண்டு தான் அவர் அரேபியாவைப் பாடுறாரு.

**86. தேம்பாவணியும் இந்த தன்மைதானா...**

அந்தத் தன்மை வரத்தான் செய்யும். இவர்களுக்கு அதில் வந்த ஈடுபாடு காரணமாக வந்தது.

**87. ஆனால், அது தமிழ்க் காப்பியம்தான், இல்லையா?**

ஆமாம், அதை யாரும் மறுக்க முடியாது. அரேபி யாங்கிறது ஒரு கற்பனை நாடுன்னு நினைத்துவிட்டுப் போங்களேன்.

**88. மியர் டிரான்ஸ்லேசன் இமாஜினேசன்...**

அவ்வளவுதான். இப்ப கம்பனுடைய அந்த 'வண்மையில்லையோர் வறுமையின்மையால் என்பதைப் பற்றி, பெரிதாக எழுதியிருக்கிறேன். இராமாயணம் ஆறு காண்டத்துக்கு முன்னுரைகள் எழுதினேனே. ஒரு புது ஐடியா டெவலப் பண்ணி எழுதியிருக்கிறேன். இவன் ஏன் அப்படிப் பண்ணினான்னா, இது வரையில் அவருடைய கற்பனை கிற்பனை என்று சொல்லி இருந்தாங்க. நான்கூட அப்படி எழுதியிருக்கேன் ஒரு காலத்தில். அது வால்மீகத்தில் இருக்கு. இங்கேயிருந்து போனதாகக்கூட இருக்கலாம். அதற்கு ஒரு காரணம் கற்பித்தேன். கம்பனுக்குச் சடையப்பன் எவ்வளவுதான் சோறு போட்டுப் பிள்ளை மாதிரி வளர்த்தாலும் மனசுல நெருடல். என்னா இருந்தாலும் எனக்கென்று என் காலிலே நிற்க முடியல்லே. எங்க அப்பனாவது ஒழுங்காக ஒரு வசதி பண்ணியிருந்தான்னா இன்று இன்னொருத்தன் சோற்றைத் தின்ன வேண்டியதில்லை. எங்க அப்பாவை விட ரொம்ப அன்பா இருக்கான், அது fact என்னைக்கி இல்லா விட்டாலும் ஒருநாள் மனத்திலே நமக்குனு ஒரு நிலை இல்லாததனாலதானே, இங்கு வந்து வளர்கிறோம். என்று நினைத்திருக்கலாம். இதனுடைய தாக்கத்தால் ஒரு ஐடியா கிரியேட் பண்ணுறான்- இவன் உடையவன்; நான் இல்லாதவன்.

உடையான்முன் இல்லார்போல் ஏக்கற்று நிற்பான் என்று பாட்டே உண்டு (திருக்குறள்). இந்த நிலைமை இல்லாமப் போக வேண்டும். அதுதான் இமாஜினேஷன். அதனாலதான் இல்லாருமில்லை உடையாருமில்லை மாதோ என்ற பாட்டு.

**89. பகீரதன் ஒரு இதுல சொல்லிருக்காரு... தேம்பாவணி எழுதன. இவர்தான் தமிழைக் கெடுத்தாரு. அப்படீன்னு எழுதியிருக்காரு. அத நீங்க ஒத்துக்கிறீங்களா? வீரமாமுனிவர் தமிழைக் கெடுத்தார்னும் எழுதி யிருக்காரு...**

ஒன்ன கெடுத்தாருன்னா எப்படி? பொத்தான் பொதுவாக

சொன்னா.. .

**90. சில வார்த்தைகளை அவர் மாத்தினாரு...**

மாத்தினானா, அது லத்தீன் நேம் (LatinName) வேறே எப்படிப் பண்ணுவான்.

**91. அவர் தமிழ் எழுதும் முறையிலேயே வந்து சில வார்த்தைகளை மாத்துனாரு...**

நீங்க அப்படி பார்க்கப் போனீர்களானால், முதல் குற்றவாளி நம் அருணகிரிநாதர். வடசொற்களைச் சேர்த்துப் போடும்போது அப்படித்தான் ஆகும். அதில் தவறு ஒன்றும் இல்லை. வட எழுத்து ஒரீ இன்னு சொன்னானே தவிர, வட எழுத்து கொண்டாந்தானா வடஎழுத்து ஒரீ இ லக்ஷ்மணன் இருக்குதுல்ல, தவறிப் போய்க்கூட லக்ஷ்மணன் என்று எழுதமாட்டான், கம்பன். இலக்குவன்னுதான் எழுதுவான். அதுமாதிரி பண்னிட்டுப் போங்க. விருபாக்ஷன்னு ஒருவன் வருகிறான். விருபாக்கன்னு எழுதுவான். அத வேறு ஒன்றும் பண்ண முடியாது. (விலங்கு நாட்டத்தன் என்பான் பின்னர்)

**92. அடுத்தது முக்கியமானது ஒன்னு கேட்கணும்னு. அய்யா. இவ்வளவு காலத்திலே இலக்கிய சம்பந்தமாகவே உங்களுடைய வாழ்க்கை அமைச்சுக்கிட்டு இருக்கீங்க. எல்லாவற்றுக்கும் மீறி யுனிவர்சலா இலக்கியம் என்பதற்கு ஒரு தனியான மதிப்பீடு, வால்யூ லைப்ல இருக்குங்களா.**

இலக்கியம்னா என்னா, யாரோ ஒருவனுடைய அனுபவம். அந்த அனுபவத்திற்கு ஒரு வடிவம் கொடுத்தான். அதுதான் இலக்கியம்.

**93. அப்ப இலக்கியம் என்பது யுனிவர்சல் கேட்டகரின்னு...**

கண்டிப்பா. உங்களுக்குத் தெரிந்ததில் நீங்கள் வடிவம் கொடுத்தீர்கள். நான் வேற்று நாட்டுக்காரன். நான் எனக்குத் தகுந்த வடிவம் கொடுக்கிறேன். அது எப்படி நீங்கள் இல்லே என்று சொல்ல முடியும்? ஆக, அது ஒருவனுடைய மனதுல பட்டுத் தெறித்த அனுபவம் தான் இலக்கியம். அப்படின்னா it has got existance. அவன் யார் கிட்டேயும் உட்கார்ந்து பாடிக்கிட்டு இருக்க வேண்டிய அவசியமில்லை. அவன் காட்டுல உட்கார்ந்து கிட்டுக்கூடப் பாடிக்கொண்டு

இருக்கலாம். அதனால தான் வால்மீகிக்குச் சிறப்பே.

**94. முக்கியமாக நீங்க இலக்கியத்தை ஏன் தேர்ந்தெடுத்தீங்க... இத்தனை வருடம் அதுலேயே இருந்திருக்கீங்க. உதாரணத்திற்கு- தமிழனுடைய வரலாறு- இலக்கியத்து வழியா வரலாறு பார்க்கிறீங்க. பெரிய புராணத்து வழியா தமிழனுடைய வரலாறு பார்க்கணும்னு நினைக்கிறீங்க. ஏன் இலக்கியத்து வழியாத்தான் தமிழனுடைய வரலாற்றைப் பார்க்கணும்னு நினைக்கிறீங்க?**

அது நான். அப்பாவுக்கு பிள்ளையாகப் பிறந்தவன் நான். ஆனா விஞ்ஞானத்துலயே படிச்சதுனால, இந்தப் பார்வையே மாறிப் போய்விட்டது. அது பெரிய உதவி.

**95. உங்களுக்கு ஒப்புதலா இருக்குமா, இல்லையான்னு தெரியல... உதாரணத்திற்கு ஒரு குறிப்பிட்ட குழு மக்களுடைய வாழ்க்கையை அறிஞ்சுக்கிடனும்னா, அவங்களுடைய இலக்கியம் வழியாகத்தான் அதை அறிஞ்சுக்கிடணும். அந்த இலக்கியம்கிறது, மொழி வழியாகத்தான் வருகிறது. அப்ப, மொழி என்பது மிக முக்கியமானது ஒரு இனத்துக்கு. அப்படின்னா அந்த மொழி வழியாகத்தான் அந்த இன வரலாற்றைக் கண்டுபிடிக்க முடியுமென்ற நோக்குல நீங்க பெரிய புராணத்தைப் பார்த்தீங்களா?**

பெரிய புராணமாகட்டும், சின்ன புராணமாகட்டும், ஒரு இலக்கியம் மொழி வழியாகத்தானே வர முடியும்? கம்யூனிகேஷன் அதுதானே? ஆமாம் அதில் என்ன சிறப்பு.

**96. லிங்குவிஸ்டிக் ஆஸ்பெக்ட்-னு சொல்றது. அதுதான். தமிழ்ல வந்து உதாரணத்திற்கு...**

Each has its own linquistic aspect,இப்ப சின்ன ஒரு உதாரணம் சொல்றேன். ஷேக்ஸ்பியர்ல- ரிச்சர்டு த செகண்ட் என்பதில். ஒரு இது வரும். a horse, a horse, a kingdom for a horse.’ ஒரு குதிரை விழுந்து செத்துப் போச்சு- என்னுடைய இராஜ்யத்தையே கொடுக்கிறேன் ஒரு குதிரைக்கு. A kingdom for a horse And they brought a horse. What a noble steed was. – இது ஷேக்ஸ்பியர்.இப்ப அவன் என்ன சொல்றான். ஹார்ஸ்-னாலும், ஸ்டீட்னாலும் அர்த்தம் ஒன்றுதான், குதிரை.

ஆனால் and they brought a horse and what a noble horse it wasனா குட்டிச்சுவர், பொயட்ரி போச்சு. குதிரை ஒன்றுதான், கிண்டியில் ஓடுவதும் குதிரைதான். ஜட்காவுல ஓடுவதும் குதிரைதான். இந்தக் குதிரை கிண்டியில ஓடும்போது... அந்தக் குதிரைக்கு மதிப்பே வேறு மாதிரியாகப் போயிருது. பல லட்சங்களுக்கு உரிய பொருளாகுது. இது பல நூறுகளிலே ஒரு குதிரையா இருக்கும். குதிரை என்கிற பொதுப் பெயரினாலே குறிக்கப்பட்டாலும், கிண்டி சம்பந்தப்படும் போது அதோட மதிப்பே வேறு. அது மாதிரி.

**97. மாணிக்கவாசகருக்கு அந்தக் குதிரையோட சம்பந்தப்பட்ட பரி-ங்கிறதே வேற...**

டோண்ட் மிக்ஸ்ப் தட்- அதுக்கு இதுல சம்பந்தமே இல்லை. குதிரை என்கிற சொல் ஷேக்ஸ்பியர் யூஸ் பண்ணும்போது and they brought a horse-ன்னா அது ஆர்டினரி மீனிங். கொண்டு வந்து, பிறகு பார்க்குறான். What a noble steed it was - எப்பேர்ப்பட்ட குதிரை அது... தேசிங்குராஜன் குதிரை. அது மாதிரி. அதுபோல எந்தச் சொல்ல எந்த இடத்தில் பயன்படுத்தணும்னு தெரிஞ்சு பயன்படுத்தினான் கவிஞன். அந்தச் சொல்லை நீங்க மாற்றினால் அதுக்கு உயிர் போயிடும். இப்ப- உணர்தல், அறிதல், தெரிதல், தெளிதல், சிந்தித்தல். எத்தனையோ சொற்கள் இருக்குது. கும்பகர்ணன் சொல்றான், நீ பண்ணலாமாடா இந்தத் தப்பை? ஆயிரமறைப் பொருள் உணர்ந்தறிவமைந்தாய் தீயினை நயந்த செய்த வினை செய்தாய்’ ஆயிரமறைப் பொருள் உணர்ந்து அறி வமைந்தாய், அறிந்து அறிவமைந்தாய் - என்றால் என்ன அர்த்தம். பாடலை அறிதல் என்பது நியூரானின் பங்ஷன் அதப் ஃபாலோ பண்ணனும்கிற அவசியமில்லை. உணர்தல் என்பது இருதயத்துடைய function மற்றவனெல்லாம் வேதத்தை அத்யயனம் பண்ணினான், காட்டுக் கத்தல் கத்தறதுக்கு. இராவணன் உணர்ந்தான். வேதப் பொருளை உணர்ந்தான். ஆகையினால. அறிந்து அறிவமைந்தாய் என்பதை எடுத்துப்புட்டு, அறிந்தான் என்று போட்டா கம்பன் செத்துடுவான். இந்த நுணுக்கத்தை எவன் கண்டு பிடிச்சான்? பாரதி கண்டு புடிச்சான். எங்க கொண்டு போய் வைத்தான்? கோயில் பூசை செய்வோன் சிலையைக் கொண்டுவிற்றல் போலும், வாயில் காத்து நிற்போன் வீட்டை

வைத்திழத்தல் போலும்; ஆயிரங்கள் ஆன நீதி அவை உணர்ந்த தருமன் தேயம்வைத்திழந்தான் போலும். சீச்சீ சிறியர் செய்கை செய்தான் என்று பாடினான். ஆயிரங்களான நீதி-அவன் உணர்ந்த தருமன். மற்றவங்க மாதிரி படித்து விட்டுப் பிரசங்கம் பண்ணிச் சம்பாதிக்கிறதுக்காகப் படிக்கல அவன். அந்தச் சொல்லினுடைய தத்துவத்தை உணர்ந்து பயன்படுத்துறான். இப்போது இதுதான் மொழி வளம். இந்த tradition இருக்கிறதுனால அதை வைத்துப் புதிய தாக்கங்கள் உண்டாகுது.

**98. உதாரணத்திற்கு நீங்க சொன்ன மாதிரி, ஒரு இனத்திற்கு மொழி நினைவுனு ஒண்ணு உண்டுங்களா?**

கண்டிப்பாக உண்டு. அதை மறுக்க முடியாது. அதாவது லிங்குஸ்டிக் மெமரி என்று அவன் சொல்றது. அடிப்படையாக, ஒரு கொஞ்ச நாள்வரையில் ஒரு எட்டு வயது வரையில்- ஒரு இடத்துல வளர்ந்துட்டு அதுக்கு அப்புறம் எங்கே போனாலும் சரி, இந்த பேஸிக் கான்செப்ட் போகவே போகாது, அந்தக் குழந்தைக்கு. நீங்க கண்டுபிடிக்கிறதுக்கு ஒரு வழி என்னவென்றால் ஒருவழி சொல்லுவான் போலீஸ்காரன். இந்த ராஜேந்திரன் ஏதோ தப்புப் பண்ணிட்டாரு, பேர மாத்திக் கிட்டாரு. கோவிந்தராஜன் பேர சொல்லிக்கிட்டே போராரு ஒண்ணும் பண்ண முடியாது. உஷாரா எந்த நேரம் கேட்டாலும் கோவிந்தராஜங்கிறாரு என்னடா வழின்னு பார்த்தான். நாலு பேரு பேசிக்கிட்டுப் போய்க் கொண்டு இருந்தபோது, இராஜேந்திரா என்று கூப்பிட்டதும். ஊம். என்று திரும்பிப் பார்ப்பான்.

**99. அதுதான் லிங்குவிஸ்டிக் மெமரி...**

100 அத ஒண்ணும் செய்ய முடியாது. என்ன செய்தாலும், எங்க இருந்தாலும் தமிழனுக்கு... அவன் ஆதியில் அடிப்படையில ஊறிவிட்டது பாருங்க. அதுதான். அதே மாதிரி எல்லாம் இங்கிலீஷ்லேயே பொளந்து அமெரிக்காவிலேயே இருப்பான். கணக்கு போடுங்க நாப்பத்தி மூன்றும் மூன்றும் நாற்பத்தி ஆறு என்று சொல்வான். ஃபார்ட்டிதிரி பிளஸ் திரி ஃபார்ட்டி நைன் என்று சொல்ல முடியாது.

**101. அத ட்ரீனியாலஜி-னு சொல்லாமுங்களா.. அதாவது தொழில் மரபு**

இல்லை... Don't mix up the words. லிங்குஸ்டிக் மெமரி is different from ட்ரீனியாலஜி.

**102. இன இணைவு-ங்கிறது என்னங்க? Racial Memory?**

இனி இப்ப நியூயார்க்ல ஒருத்தனைப் பார்க்கிறோம். செகட்டேரியட்டிலேயே ஒர்க் பண்ணுனவன் குகன்; நானும் அங்கே வேலை செய்தேன். ரொம்பப் பிரியமுண்டு. அவுங்க அப்பா எல்லாம் எனக்கு வேண்டியவர். நாங்கள் பேசுவோம். வாஷிங்டனில் சந்திக்கிறோம். ஆனா சானா வாங்க. வாங்கனு கட்டிப்புடிச்சு. ஆனா, அங்க பார்த்துப் பார்த்துப் பேசுறது வேறே. இதுதான் இனம் நம்ம இனங்கறது ரத்தத்துல ஊறியிருக்கிறது. பார்த்த வுடனே கட்டிப் புடிச்சுக்கிறோம்.

**103. அது உன்னோட இனத்த சிறுமையா நினைக்கிறது இல்ல. அது ரேசிஸம்...**

அது வேறு. That is different என்று கேட்டீர்கள். பதில் சொல்லிக் கொண்டே வருகிறேன். செய்யும் அயோக்யத்தனத்துக்கெல்லாம் நான் விளக்கம் சொல்லத் தயாராக இல்லை. பிறமொழியைக் கற்காததனால் நாம் அடைந்திருக்கும் துன்பம் கொஞ்சம் நஞ்சமல்ல. ரொம்ப இழந்து விட்டோம்.

**104.புதுமைப்பித்தனைப் பற்றிக் கொஞ்சம் சொல்லுங்கள்.**

கேளுங்க... அது என்ன ஆயிப்போச்சு. என்ன தேடியும் இரண்டு கலைமகள் மலர்கள் அகப்படாமல் போச்சு. சிறுகதையைப் பத்தி எழுதிக்கிட்டு இருக்கும் போது ஒரு தடவை ஒன்றரைப் பக்கம்- அது. பொது மக்களிடத்தில் அதை எடுத்து கடவுளும் கந்தசாமிப் பிள்ளையும் என்று டிஸ்கஸ் பண்ணியிருக்கேன். அவன் எப்படிப்பட்டவன் என்கிறதையும் எழுதியிருக்கேன். கு.ப. ராஜகோபாலன், மற்றப்படி எப்படியிருந்தாலும் புதுமைப் பித்தன் பக்கத்துல போக முடியாதுன்னு எழுதிப்புட்டேன். அது பிரிண்ட் ஆகிவிட்டது. அதில் ஒண்ணும் சந்தேகமில்லை. ஆனால் புஸ்தகம் போடுகிற காலத்தில... என் கிட்ட ஒரிஜினலே

கிடையாது எங்கிட்ட நான் எழுதுன புத்தகத்துக்கு- குறள் கண்ட வாழ்வு-னு ஆனந்த விகடனுக்காக எழுதினேன். வாசன் வீடு தேடி வந்து சொல்லி, இதை எழுதியிருக்கேன். என்னை மாற்றின பெருமை வாசனுக்கு உண்டு-னு. அதுக்கு முன்னாடி கடாபுடானு எழுதியிருக்கேன். அவர்தான் வந்து, 'மக்களுக்காக எழுதுறிங்க, நீங்க, சொற்பொழிவு பண்ணுறாப்புல அவங்க இதுக்கு உணர னும்னு பண்ணு றீங்களோ அதுமாதிரி பண்ணனும்-னு, அதில் இருந்து மாறினேன். அந்தப் புஸ்தகம் கிடையாது. கடைசியில என்ன ஆயிற்று? இராஜபாளையம் லைப்ரேரியில போய், அந்த லைப்ரரியன்கிட்ட கேட்டு, அய்யா பிரிண்ட் பண்ணுனதும் இரண்டு காப்பியா கொண்டு வந்து தர்ரேன்னு சொல்லிட்டு வாங்கியாந்து போட்டேன். அந்த மாதிரி எத்தனையோ, புத்தகங்களைக் காணாமல் போட்டு விடுவேன். எனக்கு அந்த மாதிரி 'வீக்னஸ்'

**105. புதுமைப்பித்தன் கதையை நீங்க படிக்கும்போது உங்களுக்கு எப்படி இருந்ததுங்க?**

மக்களுடைய உணர்ச்சியை ஆச்சரியமான முறையில வெளியிடுகிறவன் புதுமைப்பித்தன். எனக்கு- அவனுக்கு அப்புறம் ஜெயகாந்தன் ஒருத்தன்தான். உணர்ச்சிகளை வெளியிடுவதற்கு, புதுமைப்பித்தன் Smart-ஆகப் பண்ணுவான், அவன் சாமர்த்தியம்.

**106. ஆனா, புதுமைப்பித்தனுக்குப் பழைய தமிழ் இலக்கியத் தோடு உள்ள தொடர்பைப் பார்த்துக்கிட்டு நீங்க இருந்தீங்க. ஆனா, ஜெயகாந்தன்கிட்ட அப்படியில்ல ஏன்? புதுமைப்பித்தன் பார்த்தீங்கன்னா சிற்பியின் நரகத்துல பார்த்தீங்கன்னா ஏறக்குறைய...**

கேளுங்க... அதுக்குக் காரணம் என்னான்னா, அவனுடைய சூழ்நிலை வேறே, இவனுடைய சூழ்நிலை வேறே. இவன்கிட்ட இருந்த பிரைட்னஸ்ஸ் பார்த்து ஊக்குவித்தது எஸ்.ஆர்.கேதான் அவனுடைய இறந்த நாளுக்கு நான்தான் பிரிசைட் பண்ணினேன். அப்ப ஜெயகாந்தன். என்னை மனுஷனாக்குனவரே எஸ்.ஆர்.கே. என்றான் உண்மை அது. அவனில் இருந்து கம்யூனிஸத்தைப் பிரிக்கவே முடியல.

**107. புதுமைப்பித்தன் நீங்க சொன்ன மாதிரி, தமிழ் மரபோடு வாழ்ந்தவர்...**

ஆமாம், மரபோடு வாழ்ந்தவன். இவனுக்கு மரபுப் பழக்கம் இல்ல.

**108. மௌனியோட கதைகளைப் படிச்சிருக்கீங்களாய்யா, ஏதாவது...**

நினைவுல நிக்கிற மாதிரி ஏதுமில்ல புதுமைப் பித்தனுக்கு நான் இன்னொன்று பண்ணினேன். என்னுடைய compliment-ஐ எப்படி pay பண்ணினேன் என்றால், அகலிகை மீண்டும் கல்லானாள்-னு ஒரு கதை அதை டிராமாவாப் போட்டேன்.

**109. சாப விமோசனம்...**

ஆமாம்.

அத டிராமாவாப் பண்ணச் சொன்னேன். அவ்வளவு ஈடுபாடு எனக்கு. அந்த மாதிரி ஒரு இமாஜினேஷன் எனகது. அபபT...

**110. மொழி வளம்...**

கருத்து வளம், மொழி வளம் இல்லைய்யா, என்ன மொழி தெரியும். அவன் எப்படி இமாஜினேசன் பண்ணுவான்.

**111. அகலிகை மீண்டும் கல்லானாள்...**

ஆமாம். 67ல் டாக்டர் தியாகராஜன் கிட்ட சர்ட்டிபி கேட் வாங்கப் போனேன். நான்தான் கார் ஒட்டிக் கொண்டு போனேன். பெரிய பையன் மெய்கண்டான் கூட இருந்தான். வண்டியில் ஒக்காந்துகிட்டு, ’போடா நீ போய் வாங்கிட்டு வாடா, அம்மாவ அழைச்சிட்டுப் போய்’ என்றேன். தியாகராஜன் யாருன்னு தெரியுதா? அதான்யா அரசங்குடி ஊருக்குப் பெருமையைத் தேடிக்கொடுத்த ஒரு ஐ.ஏ.எஸ். ஆபீஸர் தான்யா.

**112. ஓ. ஓ. தியானேஸ்வரனா?...**

அவனுடைய மாமனும் நானும் ஒன்றாகவே வளந்த வங்க. நாங்க முதலியார். ஊரிலே நாங்க ஒரே ஒரு குடும்பந்தான் முதலியார், பாக்கி எல்லாரும் கள்ளர். அத்தனை பேரும் முறை அண்ணன் தம்பி முறை, மாமன் மச்சான் முறை. 'போய் வாங்கிட்டு வாடா''ன்னு சொன்னேன். அப்போது, யாரோ ஒருத்தரு என்னுடைய பேர் சொன்ன மாதிரி இருந்துச்சு. யார் அப்படீன்னு கார் கதவைத் திறந்து பார்த்தால், கவிஞரும்-மன்னர் மன்னரும் ஆன பாரதிதாசன்! என்ன கவிஞரே எப்படி யிருக்கீங்க. என்று கேட்டேன்.

ஒன்னும் நிலையில்ல, ஒண்ணும் தாங்காதுபோல இருக்குன்னார். ஏன்யா வாயால இப்படிப் பேசித் தொலையிர? நீ கவிஞன் அய்யா, சொன்னா நடக்கும். அப்படின்னு சொன்னேன். நீ கவிஞனய்யா வாயில்ல அப்படியெல்லாம் வரக் கூடாதுன்னு.. இல்ல நீ எப்பதான் என்னைப்பத்தி ஒரு திறனாய்வு எழுதப் போறேன்னு கேட்டார். கவிஞரே நீ சாகுறத்துக்குள்ள நான் எழுதுறேன். நீ கவலைப்படாதே என்று சொல்லிட்டு உள்ள போய்த் தியாகராஜன்கிட்ட கவிஞர் நிலையை நினைத்து, என்னடான்னு கேட்டேன். அதெல்லாம் ஒன்றுமில்லை, கொஞ்சம் அதிகமாப் போச்சு. வேற ஒண்ணும் கவலைப்படுவதற்கு ஒண்ணு மில்லை' என்று சொல்லிட்டான். அதை நான் நம்பிட்டேன். வேலை முடிஞ்சு போச்சு, ஒரு மாசத்துல செத்துப் போயிட்டாரு. எனக்கு மன்னிக்க முடியாத ஒரு வருத்தம், இவர் கேட்டதைப் பண்ண முடியலேன்னு. நாமா எழுதல. அப்ப நான் டைரக்டரா இருக்கேன். அது அரசாங்க வேலை. 360 புஸ்தகங்கள் கொண்டு வந்திருக்கேன். தமிழில் இன்னைக்கி உலகத்திலே எந்த சப்ஜெக்டும் கொண்டுவராத சப்ஜெக்டே இல்ல. 360 புஸ்தகத்தை 11 வருஷத்தில போட்டுருக்கேன். அதுலதான் இத விட்டுட்டேனா? மதுரையிலிருந்து இரண்டு கவிஞர் களைப் பத்தி ஒரு extension lecture Laossmorgostbgy கேட்டாங்க. புடிச்சேன். அதுலதான் பாரதி-பாரதிதாசன் வந்தது. மன்னர் மன்னன் ரொம்ப நாளைக்கு முன்னால ஏதோ ஒரு கூட்டத்துல சொன்னானாம், எத்தனையோ பாரதிதாசன் புஸ்தகங்கள் ஏதும் ஈடா வரலேன்னு. எனக்குச் சுத்தமா பிடிக்காத கொள்கைக்காரர்கள் இரண்டு பேர். பெரியாரு. பெரியாரைப்போல ஒரு பண்புடைய மனிதனைப் பார்க்கவில்லை, நான் இன்னமும். திரு.வி.க. கூடவே இருந்தவன். ரொம்ப காலமாப் பெரியார் வந்தா, நான் உள்ளே எழுந்து போயிருவேன். திரு.வி.க. மட்டும் சொல்லுவார் மடையா, நீ ஐயா பத்தித் தெரிஞ்சுக்கல. பின்னால தெரிஞ்சுக்க வேண்டிய நிலைமை ஏற்பட்டுச்சு. அதுக்கப்புறம், அந்த மனுஷன்கிட்ட எல்லையில்லாத மதிப்பு எனக்கு. அதே மாதிரி இவன் பாரதிதாசன். பண்புடைமை அதிகாரத் திலே பண்புடையார்ப் பட்டுண்டு

என்று வள்ளுவன் பாடினானே அப்படியொரு...

**113. மறைமலையடிகளாரைப் பத்திச் சொன்னீங்க. ஏன் அவரு வந்து... வைணவ நீக்குப் போக்கு இல்லாமல் பெரியாழ்வார் பாசுரம் பாடுனா... ஏன் அந்தச் சைவருக்கு, நீங்க அத் துய்த்து உணர்ந்த மாதிரி இல்லாமல் அவர்களுக்கு முடியலையே, ஏன்?**

அது வந்து ரொம்ப குறுகிய மனப்பான்மை. சொல்வதற்கு மறந்து போயிட்டேன். பாரதிதாசன் இறந்தபோது, டைரக்டரா இருந்தேன்- அப்ப மினிஸ்டர் வன்னியரு, ரொம்ப யெங்க அழகா இருப்பாரு, அவரு தலைமையிலே ஒர் இரங்கல் கூட்டம். நா. பார்த்தசாரதி முதல் பேச்சு.

**114. எங்கே அது நடந்துச்சு, சென்னையிலா, பாண்டிச் சேரியிலா?**

இங்க. மயிலை சாஸ்திரி ஹாலில், நான் கடைசிப் பேச்சாளன். காத்திருக்கேன். நா.ப. என்ன பண்ணினான்! என்னமோ மூடு அவனுக்கு மட்டிப் பய, பாரதிதாசன் பெரும்குடிகாரர். கடகடன்னு உளறுவாராம், சாக்கடை யிலயெல்லாம் உருளுவாராம். அப்புறம் அவர வந்து தூக்கிப் போட்டு இது பண்ணுவாங்களாம் என்றெல்லாம் பேசி விட்டான்.

**115. யார் சொன்னது?**

நா.பா. அப்படியே உட்கார்ந்திருந்தேன். சின்னக் காகிதத்தை எடுத்துத் தயவு செய்து அடுத்த பேச்சா என்னைப் போடவும் தலைவருக்கு எழுதியிருந்தேன். அவரு இன்பர்மேசன் மினிஸ்டரா இருந்தாரு இல்லீங்க நீங்க கடைசீலப் பேசுங்க. சரீன்னுட்டு சொல்லிட்டேன். பேசனவுடனே எனக்கு வேற வேலை இருக்குன்னு சொன்னான் நா.பா. நான் பார்த்தசாரதி இங்க வா. உட்காருன்னு சொன்னேன். என்னைய்யா ஆசா. ஆமாம் உட்காரு. நீ பேசுனியே, நீ பாரதிதாசனைப் பார்த்தது இல்ல. அவரு எனக்கு ரொம்ப வேண்டியவரு. அதாவது, கட்சிமுறைணு எடுத்துக்கிட்டா அவருக்கும் எனக்கும் ஸ்நானப்பிராப்தம் கூட கிடையாது. ஆனா அவரு எனக்கு ரொம்ப நெருங்கிய நண்பர். இப்ப நான் சொல்றேன் கேட்டுக்கொள். குடிகாரர், உண்மை. அது நஷ்டம் யாருக்கு? அவர் பெண்டாட்டிக்கும் பிள்ளைக்கும், உனக்கும் எனக்கும் ஒன்றும் இல்ல. உங்க யோக்கியதை சொல்லட்டுமா?

சிறியகள் பெறினே, பெரியகள் பெறினே யாம்பாட தான் உண்ணும் மன்னே.. இதுதான்டா
உங்க யோக்கியதைன்னுட்டேன். என்ன தமிழ் வாழுது. எல்லாம் குடிகாரக் கூட்டம். ஆனா, பாரதிதாசன் மாதிரி ஒரு கவிதை எழுத முடியும்னா எனக்கு, நான் குடிக்கத் தயார். தேவுடியா வீட்டுக்குப் போகத் தயார். இப்படீன்னு சொன்னேன். அவன் மாதிரி ஒரே ஒரு பாட்டு. அம்மாம் பெரிய நூல் எழுதறவன் நீ. ஒரே ஒரு பாட்டு. பார்த்தசாரதி உன்னுடைய குறிஞ்சி மலரும், என்னுடைய நூல்களும், நம்ம மண்டையோட காலி. இப்படியே சொன்னேன்.
ஆனால் தமிழ் இருக்கிறவரைக்கும் பாரதிதாசன் இருப்பான். அவன் குடிச்சான்கிறது பிரச்சினை இல்ல. குடிச்சான். ஆனா, அவனுடைய படைப்பு இருக்கிறதே, தமிழ் இருக்கிற வரைக்கும் இருக்கும். அந்த மாதிரி ஒரு பாட்டு எழுதக் கூடுமா? இன்னைக்கும் சொல்றேன். எத்தனை குற்றமும் மறைவா இல்ல. பாரதிதாசன் மறைவா எதையும் செய்யல. எல்லா ஒபனாகத்தான் செய்தான். நான் ஒபனா செய்யத் தயார். திட்டுதிட்டுனு திட்டிப்புட்டேன்.
பிள்ளைகாளென்றாள்; பிள்ளைகள் வந்தன. போதும்டா Compare பண்ணுடா. உன்னுடைய குறிஞ்சி மலர் முழுவதிலேயும் இப்படி ஒரு வாக்கியம் எடுடா. போதும் ஒரு வார்த்தைக்குக்கூட அகராதி தேவையில்ல. பார்த்தசாரதி. பிள்ளை காளென்றாள் பிள்ளைகள் வந்தன. அவ்வளவுதான். குடும்ப விளக்கு. இந்த மாதிரி போட்டு வாங்குன வாங்குல. என்ன அவமானப் படுத்தணும்னே நீங்க பண்ணிட்டிங்கன்னு சொல்லிட்டு கோவிச்சுக்கிட்டுப் போயிட்டான். நா.பா. சரித்தான் போடான்னுட்டேன். ராத்திரி 2 மணி இருக்கும் போன் அடித்தது. எனக்கு நண்பர்கள் இரண்டு பேர் அமெரிக்காவுல இருக்காங்க. அவங்கதான் நேரம் கெட்ட நேரத்துல கூப்பிடுவாங்க. அவங்களை நினைச்சிக்கிட்டு 2 மணினா அவங்களுக்கு பகல், நா.பா. பேசறேன் ஆசா. கண்ணோட கண் மூடல. நீங்க சொன்னதையெல்லாம் சிந்திச்சுப் பார்த்தேன். பெருந்தவறு பண்ணிட்டேன் என்று சொல்லி அழுதான். பார்த்தசாரதி மறந்துரு. தீர்ந்து போச்சு. உன்னுடைய கண்ணிராலேயே கழுவிட்ட அவன் எப்பேர்ப்பட்ட புலவன்-கிறத இப்போப் பேசி பிரயோஜனம் இல்ல பார்த்தசாரதி. இப்பவும்

சொல்றேன். இன்னும் யாரும் அவனைப் புரிஞ்சுக்கல்ல. பாரதியையும் ஒருத்தனும் ஒத்துக்கல்ல, நாட்டுப் பாடலைச் சொல்லிக் கதையடிக்கிறவன்தான் இருக்கான்.

பாரதி கவியுளம் காண்கிலார் என்று பாடுனானே, அது இரண்டுபேருக்கும் சரியானது. பாரதிதாசனை வைச்சு உபயோகப்படுத்தினாங்க எல்லாக் கட்சிக் காரங்களும். அதைத்தவிர அவனை உண்மையா உணர்ந்தவர்கள் யாரும் இல்ல. இன்னொரு ஐம்பது வருஷத்துக்குப் பின்னால அவன் செத்து ஐம்பது வருஷம் ஆகணும். அப்பத்தான் evolution வரும். விருப்பு-வெறுப்பு நீங்கும். அதற்கப்புறம் நா.பா. சொன்னான்: நல்ல பாடம் கற்பிச்சீங்க. ஒண்ணுமில்லப்பா, இந்த மாதிரி கவிஞன் நம்ம அதிர்ஷ்டம். ஒரே நாளில இரண்டு பேரும் இருந்தாங்க. பொசுக்குன்னு போயிட்டாங்க இரண்டு பேரும்.

இன்னும் 100 வருஷம் ஆகணும் இன்னொரு கவிஞன் வருவதற்கு. ஆகையினால் அவரை நினைக்கும் போதெல்லாம் அதற்கு புஸ்தகத்தை விரிவா எழுதணும்னு ஒரு ஆசை எனக்கு. இப்ப எனக்கு என்ன கோளாறுனா, படிக்க முடியாது. அதோட 2-3 வேறு வேலைகளைக் கையில வைச்சிக் கிட்டு இருக்கேன்.

**116 உன்னதமான படைப்பாளிக்கெல்லாம் இப்படி ஒரு குறை இருக்க முடியுங்களா?**

அதாவது, உங்களுடைய சிறுமையில் உங்க ஸ்கேல்ல எடுத்து அவனை அளந்து பார்க்கிறீங்க. இந்த ராஜேந்திரன் கையில் கஜக்கோல் இருக்கு. ஏன்னா அவன் துணிவியாபாரி. பால்காரன் காலையில் பால் கொண்டு வருகிறான். அளப்பதற்குப் பாத்திரம் இல்ல. இதுவும் அளவுகோல்தான் இதுல ஊத்துடா'ன்னு ஊத்தச் சொல்கிறோம். நம்ம சிறுமைகளினாலே நாம் சில கொள்கைகளை வகுத்து வச்சிக்கிட்டு இருக்கோம். ஆகவே, இதையே வைச்சு அளந்தோம்னா அவன் புடிபட மாட்டான். அவனை அளக்குறதுக்கு இந்த ஸ்கேல் இல்ல. அவன் குடிக்கிறான். தேவுடியா வீட்டுக்குப் போறான். அவன் என்ன பண்ணுறாங்கிறது பேச்சு இல்லை. அத கவனிக்க வேண்டியவன் ஆண்டவன். இப்படிப்பட்ட கவிஞனை ஆண்டவன் ஒருத்தனாலத்தான் படைக்க முடியும். இந்த

வீக்னஸ் அவன் வேணும்னு கொடுத்திருக்கிறான். ஏன் என்று தெரியவில்லை.

**117. நான் பாரதிதாசனுக்குமட்டும்னு சொல்லல, பொது வாகவே, இலக்கியவாதிகள், இலக்கியப் படைப்பாளிகள், உயர்சிறந்த படைப்புக்களையெல்லாம் படைச்சவங்களைப் பார்த்தா, அவங்க இந்தச் சாதாரண வெளிப்பொருளா அவங்க வரல.**

அவர்கள் வரமுடியாது. அதுல வந்த இதுலேயும் அவன் சாவதானமாத்தான் இருப்பான். நம்மைப் போல ஸ்ரீமான் போஜனமாகத்தான் இருப்பானே தவிர, ஒரு புதுமைப்பித்தனாகவோ, பாரதிதாசனாகவோ, ஜெயகாந்தனாகவோ இருக்க முடியாது.

**118. புதுமைப்பித்தனை நீங்கள் நேரிலே பாத்திருக்கீங்களா?**

ஆம.

**119. பேசியிருக்கீங்களா?**

புதுமைப்பித்தனுக்கு ரொம்ப வேண்டியவர் எங்கள் டி.கே.சி. புள்ளை தீத்தாரப்பன். தீத்தாரப்பன் எனக்குச் சொந்தக்காரன். ஆகையினால் 2-3 தடவை பேசியிருக்கேன். அவருகூடப் பேசும்போது அரை மணி நேரம் முக்கா மணி நேரம் பேசியிருக்கேன். அவன் ஒரு படைப்பாளின்னு எவனும்கூட ஒரு கனவுகூடக் கண்டுருக்க மாட்டான். அந்த மாதிரி. ஏதாவது வேடிக்கை செய்து கொண்டு இருப்போம். இவங்கள்லாம் ஒரு ரகம். இவங்களையெல்லாம் compare பண்ணுவதற்கு எடை போடுவதற்கு நமக்கு யோக்கியதை இல்லை, தகுதியும் இல்லை. முடிஞ்சா அப்ரிசியேட் பண்ணுங்க. இல்லையா, தெரியாதுன்னு விட்டுட்டுப் போங்க. நம் கெஜக்கோல் அவனைப் போட்டு எடுத்து, அவன் குடிக்கிறான், அதப் பண்ணுறான், இதப் பண்ணுறான், புகையிலை போடுறான். சிகரெட் குடிக்கிறான். இதெல்லாம் என்ன? ஒரு கப் காப்பிக்காக அவன் பட்டு இருக்கிற பாடு நெஜ வாழ்க்கையில...

**120. புதுமைப்பித்தன் ரொம்பக் கஷ்டப்பட்டுருக்கிறாரு...**

ஆம். யார் அவனை அறிந்துகொண்டார்கள், அப்படிப் பார்க்கப் போனால் பெரியாள்க எல்லாமே அப்படித்தான்.

ஏன் என்றால், அவர்கள் வணங்க மாட்டார்கள்; சொரிந்துவிட மாட்டார்கள்.

கடைசிக் காலத்துல சினிமாவுக்கு வந்தாரு.

**121. அந்தக் காலத்துல 200, 300 வாங்குற பாக்கியம்.**

ஔவையார்னு ஒன்னு எழுதினார். இராஜ முத்திரைனு ஒன்னு எழுதினார்.

**122. இதுக்கு பாரலல் தமிழ் பொயட்ரில இருக்கு.**

கோனார்கிட்டப் போய் பாடுறான். கோனார், எங்க வீட்டு அடுப்புக் குமிழ் தேயலை என்று. பானை ஏறுனாத் தானே தேயும், அந்த மாதிரி ஒரு வறுமை. உள்ளே பூனை படுத்திருக்கிறது. ஒரு சொகுசா எப்பவோ நெருப்பு பட்டதலா அந்த வெதுவெதுப்புல அது உள்ளே படுத்திருக்கிறது. அடுத்து, அவன் யானை கொடுத்தானாம், பரிசு. கொண்டு வந்து கொடுத்துப் பெண்டாட்டிகிட்ட சொல்றான். இன்னோர்க்கு என்னாது, என்னொடும் சூழாது பல்லாண்டு வாழ்தும் என்னாது. யோசனை பண்ணாதே ஏங்க, இவங்க கேட்குறாங்களே அப்படின்னுட்டு எங்கிட்ட வந்து கன்சல்ட் பண்ணாதே, வாரிக் கொடு என்று. இந்தப் பயல் வீட்டில் நேத்து வரையில அடுப்பு எரியல, இந்த மாதிரி வந்தா கதவைச் சிக்குனு சாத்திடுனு சொல்றத விட்டுட்டு, இதப் பத்தி கவலையே படாம நீ வாரிக் கொடுத்திடுன்னு சொல்றானே- இந்த மனோநிலையை. இந்தப் பாட்டத் தான் எல்லாத் தமிழ்ப் பண்டிதனும் ஒத்துகிடத் தெரியும். இந்த மனோநிலை நேற்றைய வரையில, சுவைத்தொறு அழுஉம் தன் மகத்துமுகம் மறப்புலி உரைத்து மதியம் காட்டியும். உள்ளே வாய வைத்து இழுத்துப் பார்க்குது. ஒன்னும் வரல. அதைச் சொல்றாளாம். மறப்புலி உரைத்தாலும் மதியம் காட்டினாலும் ஒன்னுக்கும் சட்ட பண்ணல அது. புலியைச் சொல்லி அச்சுறுத்தினாலும் சந்திரனைக் காட்டி வேடிக்கை காட்டினாலும் குழந்தையைச் சமாதானப் படுத்த முடியவில்லை. பெத்தானே உங்க அப்பன் அவன்கிட்ட காட்டு, ஏங்கிட்ட ஏன் வெறுப்ப காட்டுற' என்று சொல்றாள். என்ன துயரம், அந்த மனோநிலையை நினைச்சுப் பாருங்க. அப்படி வாங்கிட்டு வந்ததை அள்ளி விடுடீங்கிறானே, இவன எதில வைச்சு 'கம்பார்' பண்ண முடியும்? இந்தப் பாட்டுக்கு பதவுரை, பொழிப்புரை படிச்சுக் குட்டிச்சுவராப்

போனோம். மூலத்த மட்டுமல்ல பாட்ட அனுபவிக்கணும். பதவுரை க..ரை, பொ..ரை என்று சொல்லி இலக்கண குறிப்புகள். அவ்வளவுதான், பாட்டு குரங்கு கையில மாட்டுன பூமாலையாப் போச்சு. தமிழ்க் கவிதை, அது இன்றைக்கு தொடருது.

**123. ஆதரிஸ்டடட்... இந்த ரோலன்பாத்-ஹனுடைய...**

அந்த நம்மளவர்கள், ஆதரிஸ்டடட் என்பதை என்னைக்கோ 20 வருஷத்துக்கு முன்னாடி எழுதியது. இது எங்களவன் கண்டுபிடிச்சு அந்த authorஐக் கொன்றே விட்டான். ஏனென்றால் ஆதரைத் தெரிந்தால் நூல்ல ஈடுபட மாட்டீங்க. மறைமலை அடிகள் கதைதான். நம்மாழ்வாரைப் படிக்கல. அவரைத் தெரிஞ்சு, அவரு வைஷ்ணவருனு ஆழ்வார்னு தெரிஞ்சதாலேதான் அதைப் படிக்கவில்லை. இந்த நம்மாழ்வர்-ங்கிற பெயரே தெரியாத மாதிரி இந்தப் பெயர் இருந்ததுன்னு வைத்துக் கொள்ளுங்கள். படிச்சுருப்பாரு. அந்த வெறுப்புணர்ச்சி எதுல வந்துச்சு? தெரிஞ்சதனால. கொல்லுடா, உனக்குத் திருவள்ளுவன்தான், அவன் பாப்பானுக்குப் பொறந்தா என்ன? பறையனுக்குப் பொறந்தா உனக்கு என்ன?

**124. அதாவது, author யாருன்னு தெரியாம, அதுல இருக்குறதப் படிச்சு அதுல இருக்குறத உணரணும்.**

அதுல authorஐப் பார்க்குறீங்க. இளங்கோவடிகள் சமயம் பற்றிச் சொன்னேன். என் புஸ்தகத்தைப் பாருங்க. எவன் சொன்னான் அப்படி ஒருத்தன் இருந்தான் என்று. ஹிஸ்டாரிகலி ஃபால்ஸ் (historically faise) சேரன் செங்குட்டுவனு ஒருத்தன் கிடையாது. கடல்பிறக்கோட்டிச் செல்வத்தைப் பெற்றவன். பதிற்றுப் பத்துல இருக்கான். அதுல கடல் வெற்றிதான் இருக்கே தவிர, பூமி வெற்றியே கிடையாது. இதுல கடல்வெற்றியைப் பற்றி ஒரு பாட்டுக்கு ஒருவரிகூட இல்லை- இந்தச் சிலப்பதிகாரத்துல. அப்ப இவனல்ல. அப்ப எவனோ ஒருத்தன். ஏதோ வச்சான் அடிச்சான் தீர்ந்துச்சு. அதப்பத்தி ஒரு தப்பில்ல.

**125. இளங்கோவடிகள்...**

இளங்கோவடிகள் எனக்கு யாருன்னு தெரியாது. சிலப்பதிகாரத்துக்கு ஒரு ஆத்தர் இருந்திருக்கணும். அந்தக் காலத்துல ஜைனம் பெண்ணுக்கு மோட்சம்

இல்லைங்கிறது. இந்தாண்ட அவ பெண்ணு, அவ இறைவனிடத்திலே ஒரு பாதின்னு சொல்றவன். இந்தண்ட சாக்தன் எல்லாம் பெண்தான் என்று சொல்றவன். இதன் நடுவுல மாட்டிக்கிட்டவன் ஒரு பெண்ணை, பணக்கார வீட்டுல பொறந்து, பணக்காரனைக் கல்யாணம் பண்ணி, வாழ்வை இழந்து, ஒரே பிறப்புல மோட்சம். தான்மட்டும் ஏறவில்லை புருஷனையும் ஏத்தி வுட்டுட்டா. இப்படி ஒரு கான்செப்ட்டுக்குக் கொண்டு வரணும்னா- அவன் யாரோ தெரியலங்க. துறவியோ, இல்லறத்தானோ, சேரனோ, யாரோ தெரியலிங்க. ஆனால், இதிலிருந்து வர்ர அந்த ஆத்தர் இருக்கறானே. அதுவரையில தமிழ் உலகம் காணாத ஒரு ஆதர். இந்த மாதிரி கான்செப்ட் அதுவரையிலும் யாரும் செய்யவில்லை.

**126. சிலப்பதிகாரத்துக்குள்ள இருக்கிற ஒரு ஆத்தர்.**

சிலப்பதிகாரத்துக்குள்ள இருக்கிற இளங்கோ கண்ட கனவு இருக்கே, தமிழ் உலகம் அன்றுவரை காணாத ஒரு கனவு. ஒரு புது கான்செப்ட்'

**127 சிலப்பதிகாரம் மாதிரி மணிமேகலை ஏன் பாராட்டப்படவில்லை?**

நான் ஒன்று கேட்கிறேன். கவர்மெண்ட் யாரோ, அவங்களுக்கு ஏத்த மாதிரி தாளம் போடுற ஆளுங்க நீங்க.

**128 போட்டா சொல்லுங்க... அப்படியில்லேனா**

போட்டதுனாலதான் சொல்றேன். அது மாதிரி உள்ளே இருக்கும் வரைக்கும். அந்தக் கதைதான் இதுவும். வேறு ஒண்ணும் பண்ண முடியாது. ஒரு கட்டுப்பாட்டுக்குள்ள் வந்து விடுகிறோம். அந்தக் கட்டுப்பாட்டுக்குள்ள வந்தவுடனே, காப்பியமும் ஒரு கட்டுக்குள்ளே நின்று விடுகிறது. அந்தக் கட்டுப்பாடு இளங்கோவடிகளுக்கு இல்லை. சாத்தனுக்குப் புத்த மதத்த பரப்பணுங்கிறது 'எய்ம். அவன் காலத்திலே புத்திஸ்ட் கான்செப்டே' கிடையாது. அது செத்துப்போச்சு. அதுக்கு ஒரு இன் ஜெக்சன் போடனும்னு நினைக்கிறான். வேற எய்ம்' என்ன அவனுக்கு?

**புரபகென்டா.**

அவ்வளவுதான். மலர்வனம் புக்க காதை, அறக் கோட்டம், இரண்டொரு காதையில கவிதை நன்றாக இருக்கும்.

மற்றவையெல்லாம் also நன்றாகத்தான். ஆகவே அவன் ஒரு குறிக்கோள் வைச்சுட்டான்னா, அப்புறம் என்ன பண்ண முடியும்? குறிக்கோள் உள்ளவன் இவன்.

**129. அதேபோல நீதி நூல்களுக்கும், சமயத் தொடர்பா நூல் இருக்கிறதுக்கெல்லாம் நிறைய உரைகள் வந்துருக்குங்க, அதாவது சாஸ்திரங்களுடன்...**

அதற்குக் காரணம் புரியலேங்கிறதுதான்.

**130. இலக்கியத்துல பலகுரல் தன்மை இருக்கனும்கிற ஒரு கான்செப்ட் சொல்றீங்க நீங்க.**

ஆமாம்.

**31. அது வந்து சங்க இலக்கியத்தைவிடத் திருக்குறளிலே அதிகம் இருக்கு. நீதி நூல்களுக்கும், சமயம் சார்ந்த சாத்திரங்களுக்கும் இருக்கு.**

பலகுரல் தன்மை என்று எப்படிச் சொல்ல முடியும், அதை?

**132. அதுக்கு ஒரு ஸ்கோப் வைச்சுச் சொல்றது...**

இரண்டையும் ஒன்றாக்காதீர்கள். திருக்குறளில் யுனிவர்சாலிடி இருக்குது. அதுல நீங்க பல குரல் தன்மை சொல்லலாம். அறநெறிச் சாரத்துல என்ன போட்டுச் சொல்லுவிர்கள்? அது தமிழ்நாட்டிலுள்ள ஒரு group of people. அவர்களுக்காகப் பண்ணப்பட்டது. மனுஸ்மிருதி அங்கே இருக்கிற சில வைதீகப் பாப்பானுக்காக ஏற்பட்டது. Gupta period did not accept it. ஆகையினால் என்ன ஆயிற்று? குப்தா பிரியட்ல; Buddhist influence அதிகம் ஆகி, ஹிந்துயிஸம் அழியிற காலம். அப்ப ஊர்ல உள்ள பாப்பான் எல்லாம் போயிட்டான். எழுதுன புராணங்களிலே புகுந்து விளையாடிப்புட்டான். அவன். அப்ப விளையாடினது என்னன்னா ஹிந்துயிஸத்தைப் பரப்பனும். அது arithmetic கூட இருக்கலாம். Nobody bothered about it. அந்தச் சூழ்நிலை உருவாகும்போது அது மாதிரி தோன்றுகிறது இலக்கியம். நீங்க அறநெறிச்சாரம், திரிகடுகம்- இந்த மாதிரி கண்றாவிகளெல்லாம். என்னம்மோ சொல்ல வேண்டியதெல்லாம் பாட்டில் சொன்னாங்க.

ஏட்டுல உரைநடையா எழுதறதைக் காட்டிலும், பாட்டா எழுதரது ஈஸி’. அன்னைக்குப் பாடம் பண்ணுறது ஈஸி. அதை மறந்துடாதீங்க. அவ்வளவுதான். ஆகையினால

அதைப் பண்ணினான். அதப் போயி கவிதையாவது, கண்றாவியாவது... அது சங்க காலத்திலேயோ பிற்காலத்திலேயோ அதைக் கணக்கில் எடுத்துக் கொள்ள வில்லை. பத்துப்பாட்டு, எட்டுத் தொகை சமாச்சாரங்கள்ள இது கிட்டவே வரல. பின்னால வந்த சமாசாரம்.

**133. உதாரணத்துக்கு வந்து, மணிமேகலைல சொன்னிங்க, இந்த மாதிரி ஒரு குறிக்கோளுக்காக அப்படிப் பண்ணாங்கன்னு. பெரியபுராணத்தை எழுதும்போது சேக்கிழாரும் ஒரு குறிக்கோளுடன்தான்...**

அங்கதான். நான் அதை எழுதினேன். சைவத்தப் பரப்பரது அவருக்கு முக்கியமல்ல. அவர் பார்த்தது, இரண்டாம் குலோத்துங்கள் காலத்துல பீகார்ல இருந்து கன்னியாகுமரி வரை சோழ சாம்ராஜ்யம். inclusive of Andhra and Karnataka. அப்ப சுத்தி வரும்போது தேனும் பாலும் பெருக்கெடுத்து ஓடுது- ஆனா ஒரு உண்மையான டாக்டர், புதுபுதுனு உப்புனாக் கையப் புடிச்சுப் பார்த்துட்டு நாளானைக்கி வெடிக்கப்போரான்னு தெரியும். ஆனா பெத்தவக்கிட்ட போயி அம்மா. இவன் இப்படியே போய்க்கிட்டு இருந்தான்னா, நாளன்னைக்கி வெடிச்சுடு வா?ன்னு சொன்னா, பையனுக்கு ஏதும் கண்பட்டுடு மோன்னு சொல்லுவா. அவக்கிட்ட எப்படிச் சொல்ல ணும். நல்லாத்தான் இருக்கான் இருந்தாலும் இதெல்லாம் பாருங்க இதெல்லாம் பண்ணனும். சாப்பாட்ட கொஞ்சம் குறைச்சுக்கங்க- அப்படின்னு சொன்னாச் சரி. அது போல குறிக்கோளும், தொண்டும் தேவை. குறிக்கோளும் தொண்டும் இல்லாத நாடாயிற்று. இப்ப, தொண்டு இல்லை; அதத்தான் கொண்டு வந்து சேர்க்கிறான். தொண்டு without இறை பக்தி குட்டிச்சுவர்.

**134. குறிக்கோளுங்கிறதுக்கும் தொண்டுங்கிறதுக்கும் என்ன வித்தியாசம்?**

தொண்டே குறிக்கோள். தொண்டு இல்லாத குறிக்கோளும் இருக்கலாமில்லையா. மலைமேல் உட்கார்ந்துக்கிட்டுத் தவம் பண்ணுறான். அவனுக்குக் குறிக்கோள் இல்லையா?

**135. மணிமேகலையையும், பெரிய புராணத்தையும் பார்க்கும் போது பெரிய புராணத்தின் நடை வந்து**

**கம்பருக்கு...**

நடையையே விட்டுவிடுங்கள் அந்த ஆராய்ச்சியே வேறு. We are talking about totally different concepts, இப்ப இவருக்கு என்ன என்றால், தமிழ் மக்கள் மனத்திலே தொண்டு உணர்ச்சியைப் பரப்ப வேண்டும். அதுக்கு ஒருத்தன் அம்பட்டன். ஒருத்தன் வண்ணான், . அவன் இவன் சட்டி பண்ணிக் கொடுத்தான் கோவணம் பின்னிக் கொடுத்தான். இதெல்லாம் பொருந்துமா? என்ன சம்பந்தம்! ஒன்றாக இதெல்லாம் சேர்க்கிறார். எப்படீன்னா அத்தனை பேருக்கும் தொண்டுதான் common cause. சட்டி பண்ணிக் கொடுத்தவனும் தொண்டுன்னுதான் கொடுத்தான். அந்தக் common cause எடுத்து ஒன்றாக்கிவிட்டார். ஆகவே, அவருடைய இது நாட்டு மக்களுக்குப் புகுத்த வேண்டிய ஒரு குறிக்கோள் என்னவென்றால் அது தொண்டு. இறைவனுக்குத் தொண்டு.

**136. வைஷ்ணவர்கள் கடவுளுக்குத் தொண்டு செய்ததப் பத்தி அவரு சொல்லல....**

இல்லை, இல்லை அன்றைக்கு வைணவம் இருந்த இடமே தெரியாது யாருக்கும். சோழப் பேரரசில் எல்லாச் சோழனும் சைவன். அது மட்டுமல்ல. இங்க சைவம்கிறது அந்த பேஸ் இருக்குதே சுந்தரமூர்த்தியோட தேவாரம் அதுக்காக நன்றி பாராட்டித்தான் தீரனும். ஆனா இவர் சுந்தரமூர்த்தி சொன்ன ஆஸ்பெக்ட் எடுத்துக்கிடல இவர் எடுத்துக்கிட்டதெல்லாம் ஒவ் வொருத்தனும் தொண்டு செய்யணும். இந்தத் தொண்டுல என்ன தகராறுன்னா. அத எழுதியிருக்காரு. விஸ்தாரமா. இவருக்குத் தினம் 10 ரூபா கொடுத்துக்கிட்டு இருக்கேன். அன்போடத்தான் கொடுக்கிறேன். ஆனா அவருடைய மனம் என்ன செய்யும். ஒரு மாசம் ஆன உடனே பாருங்க திண்ணைச் சோறு திங்க வேண்டியிருக்கு. எங்கால்ல நிக்க முடியலேன்னு இந்த பயகிட்ட அ.ச போயி தினமும் காலேல நிகக் வேண்டியது இருக்குனு நினைப்பாரு. ஒரு இரண்டு மாசம் முடிச்சதுமே என்னதான் இராஜேந்திரன் அது இருந்தாலும் ஏதோ நாம தஞ்சாவூர்க்காரப் பையன்னு நினைச்சு தினம் பத்து ரூபா கொடுக்குறாரு. எனக்குத் திமிர் வந்துரும். வந்தத நான் வெளியில சொல்ல மாட்டேன். ஆனா அந்த

வைப்ரேஷன்ஸ்' இருக்குது பாருங்க, கூனிக் குறுகிடுவாறு. இதுக்காக என்ன செய்தான். இறையன்பைக் கூடச் சேர்த்தான். அதுக்கு நான் விளக்கம் எழுதினேன். ஜெர்மனிலேயும், அமெரிக்காவிலேயும் பிறந்த கோடீஸ்வரனுடைய மகள் இங்க வந்து குஷ்டரோக ஆஸ்பத்திரியில புண்ணைக் கழுவுகின்றாள். பெண்டாட்டி பக்கத்துல வரமாட்டேங்கிறா, அவ அரை மைலுக்கு அந்தாண்ட நிக்கறா. இவள் புண்ணைக் கழுவுறா. எப்படிக் கழுவுறா? அமெரிக்காவில் கோடீஸ்வரியா பிறந்தவள் இங்க வந்து புண்ணைக் கழுவுறாளே, என்னன்னா கோவிந்த சாமியினுடைய உடம்பு குஷ்டம் என்று நினைக்கல அவள். இயேசுநாதரா நினைக்கிறாள் அவ. அந்த ஜீஸஸ் குஷ்ட ரோகியைக் கழுவுனாரு பாரு, அந்த ஜீஸஸ்ஸ நினைச்சுப் பண்றா. அதைத்தான் நாயன்மார்களும் செய்தார்கள்.

**137. பெரியபுராணம் படிக்கிறவங்களுக்குத் தொண்டு** மனப்பான்மை வரணும்.

ஆமாம் வரனும், அது மட்டுமல்ல. அடியார்களுக்குச் சோறு போட்டான் என்றால், அடியார்கள் என்று தப்பா அர்த்தம் பண்ணாதீங்கன்னு சொன்னாங்க. அதுக்கு அர்த்தம் சொன்னார்: தெருவில் நேரே வந்தோர் யாவராயினும் - தெருவிலே யாரு வந்தாலும் சரி, - அவனை அழைத்துச் சோறு போட்டான். பாடுறாரு சேக்கிழாரு. படிக்கல ஒழுங்கா. அதுதான் தெருவில் நேர வந்தவர் யாவராயினும் என்றால் இதைவிட விளக்கமா யாரால் என்ன சொல்ல முடியும்? புத்தன் வருவான். சமணன் வருவான். அய்யங்கார் வருவான். கடவுளே இல்லேங்கிற பெரியாரு வருவாரு. எவனாயிருந்தாலும் சரி போ சாப்பிடு. இதுதான் பெரிய புராணத்தோட உயிர்நாடி.

**138. மணிமேகலை இந்த மாதிரி எதுவும்...**

அவர் செய்யவில்லை அதை அட்சயப் பாத்திரம் கதையில வருதே தவிர. அய்யோ, அவன் கேலி பண்ணுறதும் இது பண்ணுறதும் எல்லாத்தையும் சமயக் கணக்கர் தம்திறம் கேட்ட காதைனு எல்லாத்தையும் இரண்டு இரண்டு வரியில... உன்னுடைய சமயம் என்னன்னு சொல்ல வேண்டியது. அத டிஸ்கஸ் பண்ண வேண்டியது. அது இலக்கியமே அல்ல. அதுனாலதான் அது செத்துப் போச்சு.

**139. அதுக்குக்கூட தகுதியில்ல**

அதுக்குக்கூடத் தகுதியில்லையாம். மனுஷத் தன்மை இருக்கணும். அதுவும் விதி இருந்தாத்தான் வரும். இல்லை. இல்லை. விதியற்றவன்னா தகுதியில்லாதவன். நான் சொன்னேன், அமெரிக்காவிலேயே பேசினேன். harlots இல்லாத உலகமே கிடையாது. எல்லா நாட்டிலுமே உண்டு. கிரேக்கம், ரோமானியம், எகிப்து, மெசபடோமியா, சுமேரியா எல்லா நாகரிகத்திலேயும் hariots உண்டு. அவனெல்லாம் கேவலப்படுத்துனான். எங்களவன் அதையெல்லாம் பெருமைப் படுத்தினான். இது ஒரு 'சர்ப்பிரைஸ் அதுக்குனு ஒரு திணையைப் பிரித்தான். மருதத் திணைனு பிரிச்சதுமட்டு மில்ல, பிரிச்சான் அவளை. காதல் பரத்தை, இல் பரத்தை, சேரிப் பரத்தைனு. எல்லா ஊர்லேயும் தினம் உடம்ப விக்கிற வங்க இருப்பாங்க. சேரிப்பரத்தைய லிஸ்டுலேயே விட்டுட்டான். அப்புறம் லிஸ்டுல 2 இருக்கு அதுல ராங்க் இருக்குது. காதல் பரத்தைனு பேரு கழுத்துல கயிறு கட்டல்லேயே தவிரப் பாக்கியெல்லாம் பொண்டாட்டி தான் - உதாரணம் மாதவி. இந்தப் பெண்டாட்டிக்கு உள்ள அதே வாழ்க்கையை வாழ்கிறவள் அவள்.

# 3. பெரிய புராணத்தில் சில வினாக்களும் விடைகளும்

**140. கோட்புலி நாயனார் இறைவனுக்கு வைத்த நெல்லை உண்டதற்காக - பச்சிளம் குழந்தையையும் கொன்றது சரிதானா?**

**141. சிறுத்தொண்ட நாயனார் பிள்ளைக்கறி சமைத்தது நியாயம்தானா?**

**142. இயற்பகை நாயனாரிடம் அவர்தம் துணைவியாரை இறையடியார் வேண்டியதும், அவர் தந்ததும் சரிதானா?**

**143. சண்டீசர் பதம் பெற்ற விசாரசருமர், தம் தந்தையின் கால்களை வெட்டியது முறைதானா?**

ஒருவர் குற்றம் செய்தால் அக்குற்றத்திற்கு உடந்தையாகவோ, அதில் பங்கு கொண்டோ இருப்பவர் களும் குற்றவாளிகள்தாம்.

நாம் ஏறிச் செல்லும் மகிழ்வுந்து ஒட்டுநர் வேறு ஆளாக இருக்கலாம். அவர் ஒருவர்மேல் வண்டியை ஏற்றிப் பெருங்குற்றத்தை இழைத்துவிட்டால் ஒட்டுபவர் மட்டுமே அதற்குப் பொறுப்பு- நமக்கதில் தொடர்பு இல்லை என்று சொல்ல முடியாது. வண்டிக்குச் சொந்தக் காரராகிய நாமும் அக்குற்றத்திற்கு ஒரளவு பொறுப் பாளிகள் ஆவோம்.

இன்றைய சட்டம் கூட இதனை ஏற்றுக் கொண்டு Vicarious Liablity இதற்குப் பெயரும் இட்டுள்ளது.

இதனை நன்கு அறிந்தவர் சேக்கிழார்.

குற்றம் செய்த யானையை வெட்டி வீழ்த்திய எறி பத்தர் கடமையிலிருந்து தவறிய யானைப் பாகனையும், அதனை வழி நடத்திச் செல்ல வேண்டிய கடமை தவறிய ஆட்களையும் கொன்றுவிடுகிறார்.

இதனை அறிந்த அரசன், அவர்களைப் பணிக்கு அமர்த்திய தவறு தன்னுடையது ஆதலால் தானும் அதற்குப் பொறுப்பு என்று கூறித் தம்மையும் கொல்லுமாறு வாளை நீட்டுவது எறிபத்த நாயனார் வரலாற்றில் சேக்கிழாரால் சொல்லப்பட்டிருக்கக் காணுகின்றோம்.

ஆகவே, இறைவனுக்கு என்று நெல்லை வைத்து அதனைத் தொடுபவர் பெருங்குற்றத்திற்கு ஆளாவர் என்று ஊரறிய "விரையாக்கலி" என்று மக்களுக்கு அறிவித்த கோட்புலியார் அந்த நெல்லை உண்ட தாயை வெட்டியது சரியே. அவள் பாலை உண்ட குழந்தையும் vicarious liability-யின்படி அக்குற்றத்திற்கு ஆளாகிறது.

மனிதாபிமானம் என்ற அடிப்படையில் அடியார்கள் வாழ்க்கையில் விளக்கம் காண முற்படுவது சரியன்று; சராசரி மனிதர்களிடமிருந்து பல மடங்கு உயர்ந்து நிற்கின்ற இந்த நாயன்மார்கள், கொள்கை என்ற ஒன்றை எடுத்துக்கொண்டால் ஒரு நாளும் அதனைவிட மாட்டார்கள். நாம் அவர்கள் நிலையிலிருந்து அவர்கள் செயலை ஆராய வேண்டுமே தவிர, நம்முடைய நிலைக்கு அவர்களை இழுத்து வந்து ஆராய்வது சரியன்று.

தனி ஒருவனைக் கொல்வது கொலைக் குற்றம். நாட்டைக் காப்பதற்காகக் கடமை பூண்டு தன்னை ஒத்த மனிதர்களைப் பகைவர் என்று பெயரிட்டுக் கொலை புரிவது வீரம் என்று பேசப் படுகின்றது; அதற்கு விருதும் வழங்கப்படுகின்றது.

ஆயினும் கொலை, கொலைதானே! அப்படியிருக்க இந்த இரண்டு கொலைகளையும், வேறுபடுத்தி ஒன்றுக்கு மரண தண்டனையும், மற்றொன்றிற்கு விருதும் வழங்குவது எப்படிச் சரியாகும்?

இதைப் புரிந்துகொண்டால், கோட்புலியார் செயலையும் நாம் புரிந்துகொள்ள முடியும்.

அடுத்தபடியாக- சிறுத்தொண்டர் தம்பிள்ளையைக் கறிசமைத்தது சரியா என்ற வினாவைப் பார்ப்போம்.

கொள்கை அல்லது கடமை என்ற ஒன்றிற்காகத் தம் பிள்ளையைக் கறிசமைக்கும் சோதனை யாருக்கு ஏற்பட்டது? நம்மைப் போன்ற சாதாரண மனிதருக்கு அன்று.

பல்லவ மன்னனுக்குச் சேனாதிபதியாக இருந்தவர் பரஞ்சோதி. இவர் சாளுக்கியனை எதிர்த்து அவனுடைய தலைநகராகிய வாதாபி வரை சென்று ஆயிரக்கணக்கானவர்களைக் கொன்று குவித்தார் அல்லவா!

தாய்நாட்டைக் காக்கும் கடமை காரணமாக இதனைப்

பரஞ்சோதி செய்தார். பல்லவ மன்னனும் அவர் செயலைப் போற்றிப் பரிசளித்து ஒய்வு தந்தார்.

நாட்டைக் காத்தல் என்ற கடமைக்காக முன்பின் தெரியாதவர்களை வெட்டி வீழ்த்துவது சரி என்று அவரும் கருதினார். உலகமும் அதனை ஏற்றுக்கொண்டது.

அடியார்கள் எது கேட்டாலும் அப்பொருள் தம்பால் இருப்பின் அதனை மறுக்காமல் கொடுப்பது தம் கடமை. தம் கொள்கை என்ற முடிவில் வாழ்ந்தவர் பரஞ்சோதியார். எனவே நாட்டுப்பற்று என்ற கொள்கைக்காகப் பிறரைப் பலியிடுவது போல், தம் கொள்கையைக் காப்பாற்றுவதற்காகத் தம் மகனை அவர் பலியிடத் தயாராக இருப்பாரா என்பதுதான் வினா. பரஞ்சோதியார் என்ற தனிமனிதருக்கு- அவர் கொண்ட கொள்கைக்கு ஏற்பட்ட சோதனையாகும் இது. அந்தச் சூழ்நிலையில் அவர் செய்த செயலைச் சராசரி மனிதர்கள் ஆகிய நாம், நம்முடைய சிறிய அளவு கோலைக் கொண்டு அளவிடுவது சரியாகாது.

அதனால்தான் நாயன்மார்களை சராசரி மனிதரிலிருந்து மிக உயர்ந்து நிற்கும் அடியார்கள் - வீரர்கள் என்று சேக்கிழாரே போற்றுகிறார்.

அகங்கார, மமகாரமாகிய இரண்டையும் அறவே போக்கினால்தான் அடியாராக ஆக முடியும். இவை இரண்டும் போன பிறகு மகன் என்றும், மனைவி என்றும் உறவு கொண்டாடக் கூடியவர்கள் நாயன்மார்களாக இருக்க இயலாது.

நான் என்ற அகங்காரமும், எனது என்ற மமகாரமும் போன பிறகு, என் மனைவி, என் பிள்ளை என்று நாயன்மார்கள் எண்ண மாட்டார்கள்.

எனவே அகங்கார, மமகாரம் அற்ற இவர்கள் செயலை- இவை இரண்டின் வடிவமாக வாழுகின்ற நாம் அளவிட முற்படுவதும், ஆராய்வதும் பொருத்த மற்றதாகும்.

அகங்கார, மமகாரம் அற்றவர்கள்தாம் நாயன்மார்கள். அத்தகைய நாயன்மாராக இயற்பகையாரை நம் கண்முன் நாம் காணவேண்டும்.

தூர்த்த வேடத்தில் வந்த ஒருவர் "காதல் உன் மனைவியை வேண்டி வந்தனம்" என்று எதிரே சொன்ன போதிலும்

இயற்பகையாருக்கு எவ்வித உணர்ச்சி வேறுபாடும் தோன்றியதாகத் தெரியவில்லை.

"இது நமக்கு முன்பு உள்ளது" என்று கூறுகின்ற அளவிற்கு வளர்ந்துநிற்கின்றார் இயற்பகையார். "உன் மனைவியை வேண்டி வந்தனம்" என்ற சொல் அவரைப் பொறுத்தமட்டில் எவ்வித உணர்ச்சியையும் ஏற்படுத்தாமல் "இது நமக்கு முன்பு உள்ளது" என்று அவர் பேசுகிறார் என்றால் நாம் சற்றுச் சிந்தித்துப் பார்க்க வேண்டும்.

மமகாரத்தின் முழு வடிவமாக இருப்பவள் மனைவி. ஆனால் இயற்பகையாரைப் பொறுத்த மட்டில் அந்த மனைவி அவருடைய வீட்டிலுள்ள குடம், தவலை, நாற்காலி, கைக்குடை என்பவை போலவே கருதப்படும் பொருளாக ஆகிவிட்டது. அதனால்தான் "இது நமக்கு முன்பு உள்ளது" என்று பேசுகிறார்.

அடுத்த வீட்டுக்காரர் நம்முடைய குடையைச் சற்று இரவல் கேட்டால், எவ்வித மனக்கிலேசமும் இல்லாமல் "இதோ இருக்கிறது. எடுத்துப் போங்கள்" என்று சொல்லுவதைப் போல இயற்பகையார் விடை இறுக்கிறார்.

நம் போன்ற சாதாரணமான மக்களைப் பொறுத்த மட்டில் மனைவிக்கும், குடைக்கும் வேறுபாடு உண்டு. இரண்டும் மமகாரத்தின் விளைவுதான் என்றாலும் மனைவி உயிரோடு கூடிய பொருளாகவும், குடை தேவைப்படும் பொழுது பயன்படக்கூடிய பொருளாகவும் வேறுபட்ட நிலையில் உள்ளன.

நாமே மயக்கமுற்றுள்ள நிலையில் இருக்கும் பொழுது பக்கத்தில் உள்ளவர்கள் "கண்ணைத் திறந்து பாருங்கள். உங்கள் மனைவி வந்திருக்கிறாள். உங்கள் மகன் வந்திருக்கிறான்" என்று சொல்லும் பொழுது Deep Coma போன்ற ஆழந்த மயக்கத்தில் உள்ளபொழுது எவ்வித வேறுபாட்டையும் தோற்றுவிப்பதில்லை.

மமகாரத்தை அறவே ஒழித்த இயற்பகையார், அடியார்கள் விரும்பியதைக் கொடுப்பதுதான் தம் பிறப்பின் பயன் என்ற முடிவில் உறுதியாக நிற்கின்றார். எனவே "இது என்னிடத்தில் ஏற்கனவே உள்ளது. எடுத்துப் போகலாம்" என்கிறார்.

அகங்கார, மமகாரங்களை அறவே ஒழித்து இறைவுணர்வில் ஆழ்ந்து நிற்கின்றவர்கள் செய்கின்ற செயலை, அவர்களுடைய அளவு கோலைக் கொண்டு அளக்க வேண்டுமே தவிர, நம்முடைய அளவு கோலில் அளப்பது சரியன்று.

லிட்டரும், மீட்டரும் அளவுக் கருவிகள்தான். பாலை லிட்டரில் அளக்க வேண்டும். துணியை மீட்டரில் அளக்க வேண்டும். லிட்டர் அளவுக் கருவி இல்லாத பொழுது, மீட்டரும் அளவுக்கருவிதானே என்று கூறிக் கொண்டு, பாலை மீட்டரில் அளக்க முற்படுவது சரியான செயல் ஆகாது.

ஆகவே அடியார்கள் செயலை அவர்களின் அளவுகோலைக் கொண்டுதான் அளக்க வேண்டும்.

சண்டேசர் என்று பின்னர்ப் பெயர் பெற்ற விசாரசருமர், சிவபூஜையில் ஈடுபட்டிருந்தார். பால் குடத்தில் அபிடேகத்திற்குரிய பால் வைக்கப்பட்டிருந்தது.

பால் ஒன்றுதான். ஆனால், காப்பி போடுவதற்காக வைக்கப்பட்டிருக்கும் பாலை நாம் எப்படி வேண்டுமானாலும் பயன்படுத்திக்கொள்ளலாம்.

இறைவனின் அபிடேகத்திற்கு உரியது என்று குறிக்கப்பட்டு ஒரு பாத்திரத்தில் வைத்துவிட்டால் அதன் தன்மையே வேறு.

அரசு ஊழியர்களுக்கு இது நன்கு தெரியும். ஒரு குறிப்பிட்ட செயலுக்கு என்று பணத்தை ஒதுக்கி வைத்து விட்டால் (Earmarked Fund) எக்காரணத்தைக் கொண்டும் அதை மற்றொரு துறைக்குப் பயன்படுத்தக் கூடாது. இதே நிலைமைதான் விசாரசருமர் வரலாற்றில் நிகழ்கின்றது. அவர் குடிப்பதற்கென்று பாலை வைத்திருந்து அதை ஒருவர் காலால் இடறிவிட்டால் உலகம் ஒன்றும் நின்றுவிடாது. ஆனால், இறைவனின் அபிடேகத்திற்கு என்று குறிக்கப்பட்ட பொழுது அந்தப் பால் தனிப் பெருமை பெற்று விடுகின்றது.

விசாரசருமரின் தந்தை வைதிகன். ஆதலால் சிவலிங்கத்தையோ, அபிடேகத்தையோ, சிவபூசையையோ அவன் நம்பாதவன், ஏற்றுக் கொள்ளாதவன். ஆகவேதான்

அவன் அந்தக் குடத்துப் பாலைக் காலால் இடறினான்.

விசாரசருமர் சிவ அபராதம் நிகழ்ந்துவிட்டதற்காகக் கீழே கிடந்த குச்சியை எடுத்து அவன் காலில் அடித்தார். சிவ அபராதம் ஆதலால், குச்சி கோடலியாக மாறிற்று. இதில் விசாரசருமர் செய்த செயல் ஒன்றும் இல்லை. இதைப் புரிந்துகொள்வது எளிது.

நம்முடைய வீட்டில் ஒருவன் பணத்தைத் திருடி விட்டால் அதற்குரிய தண்டனை வேறு. அரசாங்கப் பணத்தைக் கையாடிவிட்டால் அதற்குரிய தண்டனை வேறு.

இரண்டும் பணத்திருட்டுத்தான். ஆனால் ஒன்று தனி மனிதராகிய நம்முடைய பணம். மற்றொன்று அரசின் சொத்தாகிய பொதுப்பணம். எனவேதான் தண்டனை மாறுகிறது.

குடிப்பதற்காக வைக்கப்பட்டிருந்த குடத்துப் பால் அன்று, அபிடேகத்திற்குரிய பால் ஆதலால் பெருந் தண்டனை கிடைத்தது.